# கல்கி

குடும்பத்துடன் படிக்க...



வெடிக்கும் எதிர்ப்பு!

KALKI
29.7.2007 ரூ.8.00
80 பக்கங்கள்

# பார்த்திபன் கனவு

–வீர சுதந்திர வெள்ளோட்டம்!

வட்டமேஜை

**ம**க்கள் பணத்தை வாங்கிக் கொண்டு ஓட்டுப் போட்டார்கள் என்று விஜயகாந்த் சொல்வது 'ச்சீ... ச்சீ... இந்தப் பழம் புளிக்கும்' என்ற நரிக் கதையை ஞாபகப் படுத்தியது.

**கோயமுத்தூர் - 15,**

**ராமலக்ஷ்மணன்**



**'பு**த்தகம் படித்து வருவதில்லை லவ்வு; அப்படி வந்தால் அது லவ்வில்லை... ஜவ்வு' என்று மறுத்த தமிழ்ச் செல்வன் - தேவி ஜோடி உண்மையான காதலை உணர வைத்து விட்டனர், சபாஷ்!

**எட்டிசேரி,**

**கா.கவிப்ரியா**

**சா**னியா குறித்த நிறை - குறைகளை சுட்டிக்காட்டியது மிகச் சரியானதே. இந்தத் தேசத்துக்கு அவர் செய்ய வேண்டியது நிறைய இருக்கிறது. திருத்திக் கொள்வாரா?

**பாளையங்கோட்டை,**

**கே.மோகன்சுந்தரம்**

**வா**சகர்களை கௌரவப்படுத்தும் 'கல்கி'யில் நானும் ஒரு புதிய வாசகனாகச் சேர்ந்து கொண்டேன்! 'கல்கி தரும் கௌரவம்' நிச்சயம் ஒரு நாள் எனக்கும் கிடைக்கும்!

**காவல்காரபாளையம்,**

**ஆர்.ரெங்கரத்தினம்**

**'ஸ்**கூலுக்குப் போன அம்மா' போல் தான் பெரும்பான்மையான அம்மாக்கள் இருக்கின்றார்கள். எனினும் குழந்தை மதுமிதா கூறுவதாக வரும் 'கடைசி வரி' இந்தக் காலக் குழந்தைகளின் மனப்பக்கு வத்தைக் காட்டுகின்றது!

**ஸ்ரீரங்கம், சுதா நாராயணன்**

**க**ல்கியின் 'திக்திக்கும் திங்கள்', வாசகர்களுக்கு 'திக்திக்' திங்களாக வலம் வருகிறது. கல்கியிலிருந்து ஃபோன் வருமே... என வாசகர்களை 'திருதிரு'என விழிக்க வைத்து ஈர்க்கும் கல்கியின் செயல் தித்திக்கிறது.

**வெங்கிட்டாபுரம், என்.குப்புசாமி**

**'அ**ன்பு வடிவாகி நிற்பவள்' சமயபுரம் ஸ்ரீமாரியம்மனைப் பற்றிய கட்டுரையில், அம்மனின் இடப் பாதத்தின்



சபாஷ் காதல்!

கீழ் அசுரனின் தலை இருப்பதைக் காணலாம் என்று எழுதியிருந்தீர்கள். 'வலப் பாதம்' என்பதே சரி.

**பனங்காடு** — **கே.செல்வராஜ்**

இப்போதெல்லாம் தலையங்கமே தேவையில்லை என்பதுபோல் கருத்துப் படங்கள் வருகின்றன. 15.7.2007 இதழின் இரண்டு கார்ட்டூன்களும் இரண்டு தலையங்கங்களுக்குச் சமம்.

**திருப்பரங்குன்றம்** — **எஸ்.சங்கர்**

## ஸ்பீட் போஸ்ட்



நீண்ட இடைவெளிக்குப் பிறகு ஈரோட்டாரின் 'இருத்தலின் எல்லையில்' கவிதை ரசிக்கவும், சிந்திக்கவும் வைத்தது.

**கூத்தப்பாக்கம்,**
**'வானவில்' மூர்த்தி**

'சர்வதேச பயங்கரவாத எதிர்ப்பு கூட்டமைப்பு உடனே தொடங்க வேண்டும்' என்கிற தலையங்கம் பலரை சிந்திக்க வைக்கும் என்பதில் ஐயமில்லை.

**கிழக்கு தாம்பரம்,** — **ஆர்.பாலாஜி**

சுப்புடு சாரைப் பற்றி எல்லோருக்கும் தெரியும். பார்த்திபனின் வரிகளில் அவரைப் பற்றி, அவரின் நகைச்சுவை கொப்பளிக்கும் குறும்பு கமெண்ட்களைப் பற்றி நிறைய அறிந்தோம்.

**பொன்மலை,** — **ஆர்.பிரகாஷ்**

ரஜினி கட் அவுட்டுக்குப் பாலாபிஷேகம் செய்ததைக் கண்டிக்கும் அன்புமணி, சந்துக்குச் சந்து டிஜிட்டல் பேனர்களை வைத்து பாதசாரிகளைப் பயமுறுத்தும் பா.ம.க.வினரையும் கண்டிப்பாரா?

**சென்னை - 78,** — **மல்லிகா அன்பழகன்**




# கல்கி

**பரதன் பப்ளிகேஷன்ஸ்**
**பிரைவேட் லிமிடெட்டிற்காக**
**பரதன் அச்சகத்தில்**
அச்சிட்டு வெளியிடுபவர்:
**லக்ஷ்மி நடராஜன்**

கல்கி பில்டிங்க்ஸ்,
47-N.P., ஜவாஹர்லால் நேரு சாலை,
ஈக்காடுதாங்கல், சென்னை - 32

ஆசிரியர் :
**சீதா ரவி**

தலைமை உதவி ஆசிரியர் :
**மு.மாறன்**

வடிவமைப்பு :
**எஸ்.ஸ்டீஃபன், எம்.மோகன்,**
**ச.கார்த்திகேயன்**

தொலைபேசி :
2225 1522, 2225 0623,
2225 1324

தொலைநகல் :
044 - 22251021

மின்னஞ்சல் :
ஆசிரியர் குழு :
kalki@kalkiweekly.com
சந்தா பிரிவு :
subscription@kalkiweekly.com
பிற தகவல்களுக்கு :
info@kalkiweekly.com
கல்கி இன்டர்நெட் முகவரி :
www.kalkionline.com

சந்தா விவரம் :
உள்நாடு :
**ஒரு வருடம் : ரூ. 440/-**
**ஆறு மாதம் : ரூ. 220/-**
வெளிநாடு (விமானத்தபால்) :
ஒரு வருடம் : 65 யு.எஸ்.டாலர்

**Bharathan Publications Private Limited,**
Kalki Buildings,
47-NP, Jawaharlal Nehru Road,
Ekkaduthangal, Chennai - 600 032.

# எந்த ஆராய்ச்சிகளும் பலன் தருவதற்கு இருபது, முப்பது வருடங்கள் ஆகும்!



இலேசாக மழை பெய்துகொண்டிருந்த ஒரு மதியம். தலைநகரில் சங்கடமான குளிர்! குடியரசுத் தலைவர் மாளிகை வாசலில் பாதுகாப்பு அலுவலரிடம் 'ஆஜர்' சொன்னதும் அவர் தம்மிடமுள்ள பட்டியலை எடுத்து, பெயரைச் சரிபார்த்து உள்ளே அனுப்புகிறார். இப்படி மூன்றுகட்ட 'சரிபார்ப்பு'களைக் கடந்து போனால், உள்ளே விஸ்தாரமான அறை ஒன்றில் அமரச் செய்கிறார்கள். ''தேனீரா? காஃபியா?'' என்று கேட்டறிந்து சிற்றுண்டியுடன் உபசரிப்பு. ஜன்னல் கண்ணாடி வழியே பசும்புல் தரையும் செந்நிற மலர்களும் தெரிகின்றன. தோகை மயில் ஒன்று நீலக்கழுத்தை நிமிர்த்தி கம்பீரமாகக் கடந்து செல்கிறது. நிசப்தத்தில் கனத்திருக்கும் அறையின் கதவைத் திறந்துகொண்டு அதிகாரி ஒருவர் வந்து அழைக்கிறார்... நீண்ட தாழ்வாரத்தை கடந்து, மற்றோர் அறைக்குள் நம்மை அனுமதித்துவிட்டு வெளியேறுகிறார்.

'இங்கு யாரையும் காணோமே...?' என்று நாம் யோசனையுடன் தேட, அந்த பிரும்மாண்ட அறையின் மறுகோடியிலிருந்து மிக மெல்லிய தமிழ்க் குரல் கேட்கிறது - சில இணைய தளங்களில் தேடச் சொல்லி யாரிடமோ தொலைபேசியில் கூறிக் கொண்டிருக்கும் குரல். அத் திசை நோக்கிச் சென்றால்... மிகப்பெரிய மேஜையின் பின் மிகச் சிறிய உருவமாக அமர்ந்திருக்கிறார். பாரத குடியரசுத் தலைவர் ஏ.பி.ஜே.அப்துல் கலாம்.

ஏதோ நீண்ட நாட்கள் நம்முடன் பழகியதைப் போல் உரையாடலை அவரே தொடங்குகிறார்... ''பேட்டிக்கு நேரமில்லையே...'' என்று இழுத்துவிட்டு, மறுக்க மனமின்றி, சில கேள்விகளுக்குப் பதில் சொல்கிறார்.

''விஞ்ஞான ஆராய்ச்சியின் பயன்கள் கடைநிலை இந்தியனையும் சென்றடைய வேண்டும்'' என்று முந்தைய நாள்தான் பேசியிருக்கிறார் - ஒரு கூட்டத்தில். ''அப்படியானால் சந்திராயணம் எதற்கு?'' என்று கேட்கிறோம்.

''அது அவசியம்... சந்திர மண்டலம் ஒரு நாட்டுக்கு மட்டும் சொந்தமல்ல; அங்கே நமக்கும் உரிமை இருக்கிறது என்பதை நாம் நிலைநாட்ட வேண்டும் இல்லையா? பௌர்ணமி நிலவைப் பார்த்து சந்தோஷப்படுகிறோம். அங்கே இருக்கிற விஷயங்கள் அதிகம் என்பதையும் நாம் தெரிந்துகொள்ள வேண்டும். விண்வெளி ஆராய்ச்சிக்குத் தேவையான ராக்கெட் எரிபொருளுக்கு

அங்கே டைட்டானியம், டங்ஸ்டன், ஹீலியம் போன்றவை கிடைக்கும்... இவை முக்கியமாக அணு ஆராய்ச்சிக்குத் தேவை... அண்டார்டிகாவில் கூடத்தான் நமது இந்திய ஆராய்ச்சிக் கூடம் இயங்கிக் கொண்டிருக்கிறது... அது எதற்காக என்று கேட்க முடியுமா...? இவையெல்லாம் நம் நாட்டின் விஞ்ஞான முன்னேற்றத்துக்கு, மக்களின் முன்னேற்றத்துக்கு அவசியமான நடவடிக்கைகள். எந்த ஆராய்ச்சியின் வித்துக்களும் பலன் தருவதற்கு 20 - 30 வருஷங்கள் ஆகும். தொடர்ந்து பல திசைகளிலும் ஆராய்ச்சி நடத்தப்படத்தான் வேண்டும்.

# நான் நம்புகிறேன்!

அணு ஆராய்ச்சியின் அபாயங்கள் குறித்த நமது சந்தேகங்கள் அவசியமற்றவை என உறுதியாக நம்புகிறார் குடியரசுத் தலைவர். ''செர்னோபைல் போன்ற விபத்துக்களெல்லாம் அந்தக் காலம்! நியூக்ளியர் எனர்ஜி இஸ் வெரி க்ளீன் எனர்ஜி. அதன் உற்பத்தியின்போது மாசுகள் வெளிப்படுவதில்லை'' என்று சுட்டிக் காட்டுகிறார்.

குடியரசுத் தலைவருக்குள் இருக்கும் விஞ்ஞானி பேசுவதை உணர்ந்து, அது குறித்தே அவரிடம் கேட்கிறோம் : ''விஞ்ஞானி கலாமுக்கும் குடியரசுத் தலைவர் கலாமுக்கும் என்ன வித்தியாசம்?''

''எல்லா பொறுப்புகளிலும் இருந்தவர் இருப்பவர் ஒரே கலாம்தான்'' என்று பொறுமையாகப் பதில் சொல்கிறார். நாட்டின் ஒட்டுமொத்த முன்னேற்றத்துக்கான தீர்க்கதரிசன ஆவணம் 'Vision 2020 document' ஒன்றை விஞ்ஞானத் தொழில்நுட்பப் பிரிவில் பணியாற்றியபோது உருவாக்கியதையும் அந்த ஆவணமே கல்வியாளர் கலாமையும் குடியரசுத் தலைவர் கலாமையும் வழிநடத்துவதையும் விளக்குகிறார். ''அதுதான் என்னுடைய எல்லா பொறுப்புகளையும் இணைத்துக் கோக்கும் நூல் சரடு!'' என்கிறார்.

''பெரிய கனவுதான் இந்தியா 2020... ஆனால், இந்தியா உலக ஊழல் பட்டியலில் 'உயர்' இடம் பிடித்திருப்பது நம் நம்பிக்கையைப் பலவீனப்படுத்துகிறதே'' என்றால்...

''நான் நம்புகிறேன்!'' என்று அடித்துச் சொல்கிறார். இந்த நாட்டில் ஊழல், இலஞ்சம், அதிகார துஷ்பிரயோகம் என்று வளர்ச்சியில் குறுக்கிடும் கோளாறுகளைச் சரிசெய்யும் ஆன்ம பலம் நம் குழந்தைகளிடமும் தாய்மார்களிடமும் இருக்கிறது என்பது கலாமின் உறுதியான நம்பிக்கை. மாணவர்களிடம் உரையாடி அவர்களது உள்ளங்களை அறிந்து பேசுவதாகக் கூறுகிறார்.

''கூட்டுக் குடும்பம் என்ற அமைப்புக்குப் பழகிய சமுதாயம் இது. நல்லது கெட்டதை எடுத்துச் சொல்ல பெரியவர்கள் இருப்பார்கள். அவர்களது அறிவுரையை ஏற்று நடக்கும் பக்குவமும் கட்டுப்பாடும் இந்த நாட்டுக்கு இயற்கையாகவே உண்டு.

ஆதி சுஞ்சுனகிரி என்ற ஊரில் ஆயிரக்கணக்கான பள்ளி மாணவர்கள் கூட்டம். பவானி என்ற சிறுமி எழுந்து என்னிடம் இதே கேள்வியைத்தான் கேட்டாள்... 'ஊழலை ஒழிக்க முடியுமா?' என்று.''

'உங்கள் பெற்றோர் அந்தத் தப்பைச் செய்தால் நீங்கள் எதிர்ப்பீர்களா?' என்று

## அப்துல் கலாம் சிறப்புப் பேட்டி!

திருப்பிக் கேட்டிருக்கிறார் கலாம். முதலில் தயக்கத்துடன் உயர்ந்த கைககள், பிறகு கிடுகிடுவென்று உயர்ந்திருக்கின்றன. ஐம்பதாயிரத்துக்கும் மேற்பட்ட மாணவர்களும் சுமார் பத்தாயிரம் பெற்றோரும் அந்தக் கூட்டத்திலேயே லஞ்ச மறுப்பு வாக்குறுதி தந்து இலஞ்ச ஒழிப்பு உறுதிமொழி ஏற்றிருக்கின்றனர்.

மக்களின் மனங்களைத் தொட்டசைக்கும் இந்த ஆளுமைதான் குடியரசுத் தலைவர் அப்துல் கலாமின் மிகப்பெரிய பலமாகக் கை கொடுத்திருக்கிறது. எளிய குடும்பத்தில் பிறந்து படிப்படியாக முன்னேறியவரின் வாழ்க்கையோடு சராசரி இந்தியனால் எளிதில் ஒன்றிட முடிந்திருக்கிறது. அவரது வாழ்க்கைப் போராட்டங்களும் முயற்சிகளும் இளைஞர்களுக்கு மட்டுமின்றி எல்லா வயதினருக்கும் உத்வேகம் அளிப்பதாக இருந்திருக்கிறது.

இந்தியக் குடியரசுத் தலைவர் பதவி என்பது அதிகாரங்கள் அற்ற அலங்காரப் பதவிதான். ஆனால், அப்துல் கலாம் மக்களிடம் நெருங்கி வந்ததன் மூலமாக, அந்தப் பதவிக்கு ஒரு புதிய பரிமாணத்தைக் கூட்டியிருக்கிறார்.

**மக்களின் மனங்களைத் தொட்டசைக்கும் இந்த ஆளுமைதான் அப்துல் கலாமின் மிகப்பெரிய பலம்!**

இலவசங்களையும் ஒதுக்கீடுகளையும் வைத்துக் கொண்டு வித்தை காட்டி கட்சித் தலைவர்கள் அரசியல் பண்ணும் சூழலில், மக்கள் மனங்களில் கனவுகளை விதைத்து உத்வேகத்தை ஊட்டிய குடியரசுத் தலைவர் ஏ.பி.ஜே.அப்துல் கலாம்.



தோற்றத்திலும் பேச்சிலும் எளிமை மேலிட இருப்பவரைப் பார்த்துக் கேட்கிறோம்: "இக்கட்டான சூழலில் உங்களுக்குக் கைக் கொடுத்த குரான் வாசகம் ஒன்று...?"

"குறள் வாசகத்தை முதலில் சொல்கிறேன்: 'உள்ளுவதெல்லாம் உயர்வுள்ளல் மற்றது தள்ளினும் தள்ளாமை நீர்த்து'. உயர்ந்த செயல்களையே செய்ய நினைத்து, அது முடியாமல் போனால்கூட, நமது எண்ணத்தின் உயர்வே வெற்றிதான். இதே கருத்துபட குரான் வாசகம் ஒன்றும் இருக்கிறது. அல் ஃபாத்தியாவில் : உன் எண்ணங்கள் இறைவனைச் சார்ந்தும், செயல்கள் இறைவனுக்கு உகந்தவையாகவும் இருக்கிறபோது பயமே வேண்டியதில்லை!"

ஒதுக்கிய நேரம் கடந்துவிட்டதால் மன்னிப்புக் கேட்டு அவசரமாக விடைபெறுகிறோம். "எப்படி வந்தீர்கள்? திரும்பிப் போக வண்டி இருக்கிறதா?" என்று கனிவுடன் விசாரித்து உறுதிப்படுத்திக் கொள்கிறார் குடியரசுத் தலைவர்!

**– சீதா ரவி**



**சோ**

எழுதிய

## மஹாபாரதம் பேசுகிறது

பாரதக் கதை பழமை வாய்ந்தது. ஆனால் அதை எழுதியிருக்கும் விதம் மிகவும் புதுமையானது. 1304 பக்கங்களில்; வியாச பாரதத்தின் சுருக்கம்; 18 பர்வங்களில் வரும் முக்கிய நிகழ்ச்சிகள்; பாரதக் கதை நடந்திருக்கக்கூடும் என்பதற்கான வழக்கறிஞர் 'சோ'வின் ஆணித்தரமான வாதம்; பலரும் கேட்டிராத நுணுக்கமான அரிய தகவல்களை விளக்கி; முக்கிய இடங்களில் பாரத நிகழ்ச்சிகளையும், கதாபாத்திரங்களையும் விமர்சித்து, இன்றைய நிகழ்வுகளோடு ஒப்பிட்டுக் கூறியிருக்கும் விதம் புதுமையானது.

இரண்டு பாகங்கள் - விலை ரூ.600/-

## ஹிந்து மஹா சமுத்திரம்

வேதங்கள், உபநிஷத்துக்கள், வேதாந்தம், சாத்திரம், புராணங்கள், ஆலயங்கள், பக்தி, சரித்திரம், நீதி, சட்டம், சமூக சிந்தனை, விஞ்ஞானம், கணிதம், இலக்கியம், வான சாத்திரம் என்று விரிந்து... ஆழ்ந்து, அகன்ற இந்த சமுத்திரத்தை அதன் கரையோரத்தில் நின்று பார்த்தவரின் பிரமிப்பு!

முதல் பாகம் விலை. ரூ.175/-

## வால்மீகி ராமாயணம்

வால்மீகி முனிவரால் எழுதப்பட்ட ராமாயணம் எனும் இதிஹாசத்தை - சுருக்கமாகவும், மிகவும் எளிய நடையிலும் சோ அவர்கள் எழுதியுள்ளார். மேலும் சில முக்கியமான இடங்களில் வால்மீகி ராமாயணம் - கம்ப ராமாயணம் மற்றும் துளசிதாஸரின் ராமாயணங்களை விட எப்படி வேறுபட்டுள்ளது என்பதையும், அப்படி விளக்கும் போது ஆங்காங்கே கம்பரின் வாக்கியத்திலுள்ள தமிழ் அழகையும் நமக்கு எடுத்துக் காட்டுகிறார்.

விலை ரூ.500/-

## இந்து தர்மம்

காஞ்சி காமகோடி பூஜ்ய ஸ்ரீ மஹா ஸ்வாமிகளின் அருளுரைகளின் சுருக்கம்.

விலை ரூ.60/-

## அதிர்ஷ்டம் தந்த அனுபவங்கள்

ராஜாஜி, மொரார்ஜி தேசாய், இந்திரா காந்தி, சந்திரசேகர், அத்வானி, காமராஜ், அண்ணாதுரை, எம்.ஜி.ஆர், கருணாநிதி, என்.டி.ஆர்., ஜெயலலிதா போன்ற ஏராளமான அரசியல் தலைவர்கள், மற்றும் சினிமா, பத்திரிகைப் பிரமுகர்களுடன் தனக்கு ஏற்பட்ட அனுபவங்களை விளக்கியுள்ளார். விலை ரூ.120/-

## கருத்தாழம் மிக்க நகைச்சுவை நூல்கள்

| | | |
|---|---|---|
| 1. | வெறுக்கத்தக்கதா பிராமணீயம் | 35.00 |
| 2. | இந்து தர்மம் | 65.00 |
| 3. | வந்தே மாதரம் | 115.00 |
| 4. | வாஷிங்டனில் நல்லதம்பி | 100.00 |
| 5. | சர்க்கார் புகுந்த வீடு | 100.00 |
| 6. | கூவம் நதிக்கரையினிலே (பாகம் 1) | 130.00 |
| 7. | கூவம் நதிக்கரையினிலே (பாகம் 2) | 45.00 |
| 8. | கூவம் நதிக்கரையினிலே (பாகம் 3) | 27.00 |
| 9. | துக்ளக் படமெடுக்கிறார் | 50.00 |
| 10. | அதிகப் பிரசங்கம் | 32.00 |
| 11. | இவர்களைத் தெரிந்து கொள்ளுங்கள் | |
| 12. | யாரோ இவர் யாரோ? | 65.00 |
| 13. | சாதல் இல்லையேல் காதல் | 80.00 |
| 14. | மைடியர் பிரம்ம தேவா | 30.00 |
| 15. | இந்தியா எங்கே போகிறது? | 20.00 |
| 16. | துக்ளக் கேள்வி - பதில் பாகம் 1 | 24.00 |
| 17. | துக்ளக் கேள்வி - பதில் பாகம் 2 | 45.00 |
| 18. | ஒண்ணரை பக்க நாளேடு பாகம் 1 | 40.00 |
| 19. | காமராஜை சந்தித்தேன் | 60.00 |
| 20. | புரட்சி கீதை | 35.00 |
| 21. | திரையுலகைத் திரும்பிப் பார்க்கிறேன் | 45.00 |
| 22. | யாருக்கும் வெட்கமில்லை | 40.00 |
| 23. | சட்டம் தலை குனியட்டும் | 40.00 |
| 24. | எங்கே போகிறாய்? | 40.00 |
| 25. | என்று தணியும் இந்த சுதந்திர தாகம்? | 35.00 |
| 26. | இறைவன் இறந்து விட்டானா? | 35.00 |
| 27. | இன்பக் கனா ஒன்று கண்டேன் | 25.00 |
| 28. | சாத்திரம் சொன்னதில்லை | 40.00 |
| 29. | சரஸ்வதியின் சபதம் | 35.00 |
| 30. | ஜட்ஜ்மெண்ட் ரிசர்வ்டு | 35.00 |
| 31. | நேர்மை உறங்கும் நேரம் | 30.00 |
| 32. | மனம் ஒரு குரங்கு | 40.00 |
| 33. | ஏன் கூடாது? | 40.00 |
| 34. | இரவில் சென்னை | 40.00 |
| 35. | முகமது பின் துக்ளக் | 35.00 |
| 36. | உறவுகள் இல்லையடி பாப்பா | 40.00 |
| 37. | சம்பவாமி யுகே யுகே | 40.00 |
| 38. | எதற்காக? | 35.00 |
| 39. | உண்மையே உன் விலை என்ன? | 37.00 |

| | | | |
|---|---|---|---|
| 1. ஸ்மைல் ப்ளீஸ் | - | சத்யா | ரூ. 40.00 |
| 2. அரசியல் கலையை அறிந்து கொள்வோம் | - | " | ரூ. 40.00 |
| 3. நையாண்டிக் கட்டுரைகள் | - | " | ரூ. 40.00 |
| 4. அரசியலும் நகைச்சுவையும் | - | " | ரூ. 32.00 |
| 5. நாடு தழுவிய நகைச்சுவை | - | " | ரூ. 50.00 |
| 6. மடசாமியின் மனசாட்சி | - | " | ரூ.100.00 |

# பின் லேடன் தலைக்கு 200 கோடியாமே?

● எஸ்.சக்தி, ராஜபாளையம்

*? 'சமுதாயத்தையும் இளைஞர்களையும் சீரழிக்கும் சினிமா தேவையே இல்லை' என்ற ராமதாஸின் கருத்து நியாயமானதுதானே?*

! அரசியல்வாதிகள் குறித்து நாளும் ஒரு புகார் வருவதால் 'நாட்டுக்கு அரசியல்வாதி களே தேவையில்லை; ஜன நாயகமே தேவையில்லை' என்று சொன்னால் ஒப்புக் கொள்வாரா? எதையும் ஆக்க பூர்வமான விஷயத்துக்குப் பயன் படுத்தும் வகையில் சீர்படுத்த வேண்டுமே தவிர, ஒதுக்கிவிடக் கூடாது. அப்படிச் செய்தால் பின் தங்கி விடுவோம்.

● அ.ராஜா ரஹ்மான், கம்பம்

*? தகவல் உரிமைச் சட்டத்தைப் பொது மக்கள் அனைவரும் பயன்படுத்தினால் நாட்டில் வறுமை, இலஞ்சம் ஒழியும்; அரசுப் பணிகள் விறுவிறுப்பாக நடக்கும் என்று தகவல் உரிமை சட்ட ஆலோசகர் கிருஷ் ஜி.தேவ் தெரி வித்திருப்பது குறித்து...?*

! இன்னமும் நம் நாட்டில் அச் சட்டத்தைப் பற்றி அறியாதோரும், அறிந்தாலும் புரிந்து கொண்டு பயன்படுத்தும் அளவுக்குக் கல்வி அறிவு இல்லா தோரும் மெஜாரிட்டியாக இருக்கிறார்கள். இச் சட்டம் ஏணியின் ஒரு படிதான்; கல்வி அறிவு, அடிப்படை நாணயம் என்ற பல படிகளைக் கடந்து தான் அவர் சொல்லும் நிலையை எய்த முடியும்.



* அமெரிக்க ஆசை!



* மசாலா மகிமை!



* விபரீதத்தடை!

# தராசு

● லெ.நா.சிவகுமார், சென்னை - 33

? ''கஷ்டப்பட்டு நல்ல கருத்தைச் சொன்னால் அதை இந்த ஜனங்களுக்கு ரசிக்கத் தெரியலை. எனவே, இனி மசாலா - கவர்ச்சி என்று இறங்கப் போகிறேன்'' என்கிறாரே மாயக் கண்ணாடி சேரன்?

! இப்படி நொந்துகொள்வதற்குப் பதிலாக, தரமான 'ஆட்டோகிராஃப்', 'சொல்ல மறந்த கதை' ஆகியவை வெற்றி பெற்ற மாதிரி 'மாயக் கண்ணாடி' ஏன் வெற்றிபெறவில்லை என்று அவர் யோசிப்பது பயன் தரும்.

● எஸ்.சங்கர், திருப்பரங்குன்றம்

? செம்மண் தரையில் நடால், புல் தரையில் ஃபெடரர் - யாருடைய வெற்றி அசத்தலானது?

! விம்பிள்டன் இறுதி ஆட்டத்தில் வெற்றி தோல்வி இரண்டுமே அசத்தலாகத்தான் இருந்தன. வெற்றி பெற்ற ஃபெடரரே இதை ஒப்புக் கொண்டு, நடாலை எவ்வளவு பெருந்தன்மையுடன் மனப்பூர்வமக வாழ்த்தினார்! அது ஆட்டத்தை விடவும் பெரிய அசத்தல்!

● கு. கணேசன், மறைமலைநகர்

? உள்ளாட்சித் தேர்தல் பாணியிலேயே கூட்டுறவு சங்கத் தேர்தலையும் நடத்திய தி.மு.க. அரசின் சாதனை குறித்து?

! தேர்தலை நடத்திய விதம் வேதனை; அதை ரத்து செய்தது சாதனை. அடுத்த கட்டம் பெரிய யோசனை!

● எச்.ஆன்டனி தமிழரசன், மும்பை-17

? முன்னாள் அமைச்சர் தயாநிதி மாறனின் முறைகேடான செயல்பாட்டினால் தொலைபேசித் துறைக்கு ஏற்பட்டிருக்கக் கூடிய பத்தாயிரம் கோடி இழப்பை, தாம் பதவிக்கு வந்து தவிர்த்திருப்பதாக தற்போதைய அமைச்சர் ராஜா குற்றம் சாட்டியுள்ளாரே?

! இதை அந்தத் துறை ஊழியர்களே மறுத்திருப்பது குறிப்பிடத்தக்கது. தயாநிதியோ தம் மீது சுமத்தப்பட்ட களங்கத்தைத் துடைக்க விசாரணை கோரியுள்ளார். பிரதமர் அத்தகைய விசாரணைக்கு உத்தரவிடவில்லையெனில், ராஜாவின் குற்றச்சாட்டுக்கு உள்நோக்கம் இருப்பதாக ஆகும்.

● வே.சித்ரா, கும்மிடிப்பூண்டி

? அந்துமணி ரமேஷ் மீது பாலியல் புகார் கூறப்பட்டிருப்பது தராசைப் பாதிக்கிறதா?

! உண்மை எதுவானாலும் இதைப் போன்ற குற்றச்சாட்டுகள் பத்திரிகை உலகில் எழுவதே வருத்தமளிக்கிற விஷயம்தான். வியாபார நோக்கில் பத்திரிகை



களின் தரம் தாழ்வதும் இதற்கு ஒரு காரணம்.

● ஆர்.பார்த்தசாரதி,
சென்னை - 93 ❒

? ஜப்பான், ஸ்விட்ஸர்லாந்து ஆகிய நாடுகளில் மட்டுமே தொழிலாளர்கள் சராசரியாக ஆறு மணி நேரம் வேலை செய்வதாகவும் இந்தியாவில் சராசரியாக ஒருவர் 3.09 மணி நேரம் மட்டுமே உழைப்பதாகவும் செய்தி. இங்கே ஆண்டில் 196 நாட்கள் விடுமுறை வேறு! இந்த 'ரேட்டில்' வல்லரசு கனவு நமக்குத் தேவையா?

! தேவையில்லாமல்...? நமக்குத்தானே கனவு காண அவ்ளோ.... நேரம் இருக்கு!

● அ.சுஹைல் ரஹ்மான், திருச்சி - 21

? கட்சி வேறுபாடுகளை மறந்து, மன நிறைவுடன் கூட்டுறவுத் தேர்தலை நடத்துவோம் என்று அனைத்துக் கட்சித் தலைவர்களுக்கும் கருணாநிதி வேண்டுகோள் விடுத்துள்ளாரே...

! மன நிறைவு என்பது இடங்களைப் பங்குபோட்டுக் கொள்வதாக முடியலாம். எனவே, தார்மிக நெறிகள், ஜனநாயகக் கட்டுப்பாடுகள் என்று கம்யூனிஸ்டுகள் வலியுறுத்துவது கவனிக்கத்தக்கது. உள்ளாட்சித் தேர்தல்களும் கூட்டுறவுத் தேர்தல்களும் கட்சி செல்வாக்கின்றி நடப்பதே நன்மை தரும்.




● எல்.எம். அபிதா,
திருவண்ணாமலை ★

? ஒசாமா தலைக்கு அமெரிக்கா 200 கோடி பரிசு தருவதாக அறிவித்துள்ளதே - இது பலனளிக்குமா?

! தற்கொலைப் படையினரில் ஒருவனாக விளங்கி சாவதையே தாம் விரும்புவதாக பின் லேடனின் சமீப அறிக்கை ஒன்று கூறுகிறது. எனவே, அவரைக் காட்டிக் கொடுப்பது, கொன்று போடுவது என்பதெல்லாம் நடக்கிற காரியமாகத் தோன்றவில்லை. அமெரிக்காவுக்கு இருநூறு கோடி லாபம்.

● என்.காளிதாஸ், சிதம்பரம்

? தமிழகத்தில் பயங்கரவாதம் அதிகரித்துள்ளதாக மத்திய அமைச்சர் இளங்கோவன் குற்றம் சாட்டியுள்ளாரே...

! காங்கிரஸ் மேலிடத்தின் 'பயங்கரவாதத்துக்கு' அவர் ஆளாகிவிடாமல் இருக்க வேண்டும் - இந்த உண்மையைச் சொன்னதற்காக!

❒ ரூ.100/- பரிசு பெறுபவர்:
ஆர்.பார்த்தசாரதி,
சென்னை - 93

✱ ரூ.50/- பரிசு பெறுபவர்:
எல்.எம்.அபிதா,
திருவண்ணாமலை

● ஜோ.பன்னீர்செல்வம்,
சென்னை -12

? தமிழகத்தில் முதல் முறையாக ஐந்து போலீஸ் நிலையங்களில் கண்காணிப்பு காமெராக்கள் அமைக்கப்பட்டுள்ளனவே, இனி தவறுகள் குறையுமா?

! நல்ல வேடிக்கை! ஸ்டேஷனுக்கு உள்ளே நடக்கக் கூடிய எதையும் அதன் நான்கு சுவர்களுக்கு வெளியேயும் நடத்திக் கொள்ள காவல் துறையினருக்குத் தெரியும்; முடியும்! நிகர லாபம், காமெராக்களுக்கு ஆகும் வீண் செலவுதான்! ●

உலகின் நம்பர் ஒன் பணக்காரராக இருந்த பில்கேட்ஸ் அண்மையில் இரண்டாவது இடத்துக்கு வந்துவிட்டார். அவருக்கு அடுத்த இடத்தில் இருப்பவர் வாரன் புஃப்ஃபெட். அமெரிக்காவின் பெர்க்ஷயர் ஹாத்வே என்ற பிரம்மாண்டமான நிறுவனத்தின் தலைவர். சொத்து மதிப்பு நாற்பத்து நான்கு பில்லியன் டாலர். அண்மையில் பில் கேட்ஸ் தம்பதி நடத்தி வரும் அறக்கட்டளை உள்ளிட்ட ஐந்து அமைப்புகளுக்கு இவர் முப்பது பில்லியன் டாலர் நன்கொடை வழங்கியது அமெரிக்காவில் தலைப்புச் செய்தி.

வாரன் புஃப்ஃபெட்டின் வாழ்க்கை மிகவும் ஆச்சரியகரமானது. தமது பதினோராவது வயதில் இவர் தமது சேமிப்பை வைத்து ஷேர் மார்க்கெட்டில் முதலீடு செய்தார். 'இத்தனை குறைந்த வயதில் ஷேர் மார்க்கெட்டில் நுழைந்தவரா நீங்கள்?' என்று கேட்டால், ''இப்போது யோசித்துப் பார்க்கிறபோது, நான் கொஞ்சம் லேட் என்று தோன்றுகிறது'' என்கிறார். பல்வேறு நட்சத்திர கம்பெனிகளின் ஷேர்களிலும் முதலீடு செய்து லாபம் சம்பாதித்த இவர், காலப்போக்கில் கம்பெனிகளையே வளைத்துப் போட்டுவிட்டார். இன்று இவருக்குச் சொந்தமான கம்பெனிகளின் எண்ணிக்கை அறுபத்து மூன்று.

ஐந்தாண்டுகளுக்கு முன்புதான், மைக்ரோசாஃப்ட் தலைவரான பில் கேட்ஸ் முதல் தடவையாக வாரன் புஃப்ஃபெட்டைச் சந்தித்தார். பில்கேட்சுக்கு, புஃபெட் பற்றிப் பெரிதாக அப்போது தெரிந்திருக்கவில்லை.எனவே, போனால் போகிறதென்று ஒரு நாள் மாலை, அரை மணி நேரம் மட்டும் அவருக்கு அப்பாயின்ட்மென்ட் கொடுத்தார். ஆனால், புஃப்ஃபெட்டைச் சந்தித்துப் பேசியபோது, அசந்து போனார் பில் கேட்ஸ். அவர்கள் பத்து மணி நேரம் பேசினார்கள்! விடை பெறும் போது, "நான் உங்கள் சிஷ்யன்" என்று சொல்லிப் பெருமைப்பட்டாராம் பில்கேட்ஸ்.

நாற்பத்து நான்கு பில்லியன் டாலர் சொத்து மதிப்பு. ஆனால் ஒரு செல்போன் கூட வைத்துக்கொள்ள மாட்டார்!

புஃப்ஃபெட்டின் நிர்வாக ஸ்டைலே அலாதியானது. தமக்குச் சொந்தமான கம்பெனிகளின் தலைமை நிர்வாகிகளை அடிக்கடி கூப்பிட்டுப் பேசமாட்டார். ஆண்டுக்கு ஒருமுறை அவர்கள் அனைவருக்கும் கடிதம் எழுதுவார். அதில் அந்த வருடத்துக்கான இலக்கு என்னவென்பதைத் தெளிவாகக் குறிப்பிடுவார். தலைமை நிர்வாகிகளுக்கு

# பில் கேட்ஸின் குரு!

அவரது தங்கக் கட்டளைகள் இரண்டே இரண்டுதான். ஒன்று : பொது மக்கள் உங்கள் கம்பெனியில் முதலீடு செய்துள்ள பணத்துக்கு நஷ்டம் ஏற்படும்படி நடந்து கொள்ளாதீர்கள். இரண்டாவது : முதல் கட்டளையை எப்போதும் மறக்காதீர்கள்.



**பு**ஃப்ஃபெட் போல எளிமையான மெகா பில்லியனரை உலகில் பார்க்கவே முடியாது. ஐம்பது ஆண்டுகளுக்கு முன்பு அவர் வாங்கிய மூன்று அறைகள் கொண்ட வீட்டில்தான் இன்னமும் வசித்து வருகிறார். ''இந்த வீட்டில் எல்லா வசதிகளும் இருக்கின்றன! எனக்கு இதற்கு மேல் ஒன்றும் அவசியமில்லை!'' என்கிறார். தம் காரை தாமேதான் ஓட்டிச் செல்கிறார். இவருக்கு உலகின் மிகப் பெரிய விமான கம்பெனியே சொந்தம். ஆனாலும், தனி விமானத்தில் பயணம் செய்ய மாட்டார். இரவு நேரங்களில் பார்ட்டிகளுக்குப் போய் ஜாலியாகப் பொழுதுபோக்கப் பிடிக்காது. வீட்டில் உட்கார்ந்துகொண்டு, பாப்கார்ன் கொறித்தபடி டீ.வி. பார்ப்பதுதான் இவருடைய பொழுது போக்கு. செல்போன் வைத்துக்கொள்ளவில்லை. அலுவலக மேஜை மீது கம்ப்யூட்டர் கிடையாது.

**வா**ழ்க்கை பற்றி இவரது கருத்துக்கள் கூர்ந்து கவனிக்கத்தக்கவை. புஃப்ஃபெட் கூறுகிறார்:

★ உங்கள் திறமைதான் உங்கள் வாழ்க்கைக்கான முதலீடு

★ பணத்துக்காக மனிதன் கிடையாது, மனிதனுக்காகத்தான் பணம்

★ வாழ்க்கையில் அதிகபட்ச எளிமையைக் கடைபிடியுங்கள்

★ மற்றவர்கள் சொல்வதைக் கேட்டு அப்படியே செயல்படாதீர்கள். மற்றவர்கள் சொல்வதைக் கேட்டுக் கொள்ளுங்கள்; உங்களுக்கு எது சிறந்தது என்று படுகிறதோ அதைச் செய்யுங்கள்.

★ உடை விஷயத்தில் புகழ் பெற்ற தயாரிப்பா என்று பார்க்காமல், உங்களுக்கு எது அணிவதற்கு சௌகரியமோ அதை வாங்குங்கள்.

★ பணத்தை விரயம் செய்யாதீர்கள்; அதற்குப் பதிலாக யாருக்குத் தேவைப்படுகிறதோ அவர்களுக்காக செலவு செய்யுங்கள்.

★ உங்கள் வாழ்க்கை உங்களுடையது; உங்களை மற்றவர்கள் அதிகாரம் செய்ய அனுமதிக்காதீர்கள்.

– எஸ்.சந்திரமௌலி



# கல்கி

2007 ஜூலை 29
சர்வஜித் ஆடி 13
மலர் : 65
இதழ் : 52

தமிழ்த்திரு
நாடுதன்னைப்
பெற்ற தாயென்று
கும்பிடடி பாப்பா

- பாரதியார்

## மூன்றாவது அணி செய்த மாபெரும் தவறு!

**ம**க்கள் பிரதிநிதிகள் மக்களின் கருத்தைப் பிரதிபலிக்கும் நிலைமாறி, அவர்கள் தங்கள் கட்சியின் அரசியல் நோக்கை மட்டுமே பிரதிபலிக்கும் போக்கு நம் நாட்டில் நிலைத்து விட்டது. இப்படிப்பட்ட சூழலில், 'குடியரசுத் தலைவர் தேர்தலில் கட்சிக் கொறடா உத்தரவு கூடாது; ஆனால் வாக்களிக்காமலே இருக்க உரிமை உண்டு' என்று தேர்தல் கமிஷன் கூறுவது சட்டப்படி சரியாக இருக்கலாம் என்றாலும் முரண்பாடுதான். ஏனெனில், எந்த ஓர் எம்.பி.யோ, எம்.எல்.ஏ.வோ இன்றைக்கு மனசாட்சிப்படி வாக்களிக்கும் தார்மிக பலமும் சிந்தனைத் தெளிவும் அற்றவராகத்தான் இருக்கிறார். அரசியல் கட்டாயங்களே அவரை ஆட்டிப் படைக்கின்றன. எனவே, ஓர் அரசியல் கட்சித் தலைவரின் வேண்டுகோள்கூட கட்சிக் கொறடாவுக்குச் சமமாகிவிடும்.

இவ்விதழ் வெளியாவதற்குள் குடியரசுத் தலைவர் தேர்தலின் முடிவுகள் வெளியாகி, அனேகமாக பிரதிபா பாட்டில் அப் பொறுப்புக்குத் தேர்வாகியிருப்பார். கிரிமினல் குற்றச் சாட்டுகள் உள்பட பல முறைகேடுகளுடன் தொடர்புபடுத்தப்பட்டுள்ள ஒரு வேட்பாளர், முதன் முறையாக இந்தியாவின் குடியரசுத் தலைவர் பதவியை ஏற்பதென்பது நாட்டுக்கே அவமானம் மட்டுமல்ல; அபாயமானதும்கூட.

அப்துல் கலாம் போட்டியிட மறுத்துவிட்ட நிலையில், உடனடியாக மூன்றாவது அணியினர் மட்டும் நெஞ்சில் உரமும் நேர்மைத் திறனும் படைத்த அரசியல் சார்பற்ற வேறு






ஒரு வேட்பாளரை முன்மொழிந்து இத் தேர்தலில் நிறுத்தியிருப்பார்களேயானால், நாட்டின் கௌரவமும் குடியரசுத் தலைவர் பதவியின் கௌரவமும் காப்பாற்றப் பட்டிருக்கும். அந்த மூன்றாவது வேட்பாளர் வெற்றி பெற்றிருக்க முடியாதுதான். ஆனால், காங்கிரஸ் கூட்டணி, பா.ஜ.க. கூட்டணியின் உள்நோக்கங்கள் மிக அழுத்தமாக மக்களுக்கு உணர்த்தப்பட்டிருக்கும். இவ்விரு அணிகளிலும் இருக்கக் கூடிய மனசாட்சி படைத்த ஒரு சில மக்கள் பிரதிநிதிகளேனும் அப்பழுக்கற்றதொரு வேட்பாளருக்கு வாக்களிக்கும் வாய்ப்பைப் பெற்றிருப்பார்கள். இந்தக் குடியரசுத் தலைவர் தேர்தலில் அப்படி ஒரு சந்தர்ப்பமே இல்லாமல் போய்விட்டது.

அப்துல் கலாமைப் போன்ற தூய்மையான ஒருவருக்குப் பிறகு, நேர் விரோதமான ஒருவர் அவ்விடத்தில் அமர்வதை இந்திய மக்கள் சகித்துக்கொள்ள வேண்டியிருக்கிறது! அரசியல்வாதிகளின் சுயநலத்துக்குத் தேசநலன் காவு கொடுக்கப்பட்டிருக்கிறது.

மூன்றாவது அணி என்பதாக ஒன்று ஆரம்பித்திருப்பதே மக்களின் உரிமைகளையும் நலன்களையும் பேணுவதற்காக அல்ல; அவ்வணியினரின் அரசியல் செல்வாக்கை பலப்படுத்திக் கொள்வதற்காகத்தான் என்பது அவ்வணி செய்த முதல் காரியத்திலேயே வெட்டவெளிச்சமாகிவிட்டது! அந்த அணியைச் சேர்ந்த எம்.பி.க்கள், எம்.எல்.ஏ.க்கள் அனைவருக்கும் குடியரசுத் தலைவர் தேர்தலில் வாக்களிக்கும் வாய்ப்பே பறிபோய்விட்டது. இந்த எம்.எல்.ஏ.க்களையும் எம்.பி.க்களையும் தேர்ந்தெடுத்த மக்கள் ஏமாற்றப்பட்டுவிட்டனர்.

கூட்டுறவுத் தேர்தல்களும் அரசியல்மயம்; குடியரசுத் தலைவர் தேர்தலும் அரசியல்மயம்! அடி முதல் நுனி வரை புரையோடிக் கிடப்பதற்கான அடையாளம் இது! ●

**என்** அப்பாவுக்கும் அம்மாவுக்கும் திருமணமான புதிதில்(1969) பஞ்சாபி லிருந்து டெல்லிக்கு ரயிலில் பயணம் செய்துள்ளனர். அப்போது, அவர்களுக்கு எதிரே கணவன் - மனைவி, இரண்டு குழந்தைகளுமாக ஒரு குடும்பம் அமர்ந்துள்ளது. பதினெட்டு வயது இளைஞனும் ஆறு வயதுச் சிறுமியும்தான் அந்தக் குழந்தைகள்.

திடீரென அந்த இளைஞன் என் அம்மாவை உற்று உற்றுப் பார்த்திருக்கிறான். அந்தப் பார்வை இயல்பானதாக என் அம்மாவுக்குப் படவில்லை. உடனே அவனைப் பார்த்து, ''ஏன் இப்படிப் பார்க்கிறாய்?'' என்று சைகையால் கேட்டிருக்கிறார். அந்த இளைஞன் மேலும் உற்றுப் பார்த்து, அம்மாவைச் சங்கடப் படுத்திவிட்டான். அம்மாவின் சைகையை அவன் அறிந்துகொண்டதாகத் தெரியவில்லை. அவனுடைய சகோதரி தன் தாயைக் கூப்பிட்டு, நடந்த சம்பவத்தைச் சொல்லவும், அவர் ''மேடம், அவன் உங்களைப் பார்க்கவில்லை; அவனுக்கு மாறுகண் குறைபாடு'' என்றார். தன் தாயார் பேசியதைக் கேட்ட அந்த வாலிபன் அப்படியே தலையைக் குனிந்து கொண்டான்.

எல்லாவற்றையும் பார்த்த என் அம்மா வாயைத் திறந்து எதுவும் பேசுவதற்குள் கம்பார்ட்மென்டின் 'அப்பர் பர்த்'திலிருந்து ஒரு குரல் கேட்டுள்ளது. ''ஓஹோ... இலண்டனைப் பார்த்துக்கொண்டு டோக்யோவுக்குப் பேசுவாங்களே, அந்த மாதிரி போலருக்கு!'' என்று கேலி செய்திருக்கிறார் மேல் பர்த் பயணி!.

அந்த இளைஞன் நாலா பக்கங்களிலும் திரும்பிப் பார்த்துவிட்டு மீண்டும் தலையைத் தொங்கப் போட்டுக் கொண்டான். அவனுடைய பெற்றோருக்கு தர்மசங்கடமான நிலை!

அவனுடைய அம்மா, 'அப்பர் பர்த்'தில் இருந்தவரைப் பார்த்து, ''என் மகன் ஒரு வேளை கண் பார்வையே இல்லாமல் இருந்தால், அவன் மீது எல்லோரும் இரக்கப்பட்டிருப்பீர்கள். இந்தக் கேலியோடு முடித்துக் கொண்டதால் அவனது இந்தச் சின்னக் குறைபாட்டுக்கு நன்றி சொல்ல வேண்டும். அவன் மனத்திலும் ஏராளமான கனவுகள் இருக்கு.



# கண் சிமிட்டிய

ஏதோ... ஆற்றிலே அயிரை மீனைப் பிடிப்பதைப் போல ஆகாயத்திலுள்ள விண்மீனைப் பிடிக்க ஆசைப்படுபவன் அவன்'' என்றார் நெகிழ்ச்சியுடன்.

சிறிது நேரம் கம்பார்ட்மென்ட்டில் அமைதி நிலவியது. ஆனால் ஒவ்வொரு வரது எண்ண ஓட்டமும் ரயிலின் ஓட்டத்தை விஞ்சியதை அந்த முகங்களே தெரிவித்தன. திடீரென அந்த இளைஞன் அமைதியைக் கலைத்தான். ''எங்கள் அம்மா சொன்னதைக் கேட்டு வருத்தப் படாதீர்கள். என்னுடைய கண் பிரச்னையால் எனக்கு ஒரு நன்மையும் இருக்கிறது. பரீட்சை எழுதும்போது, என் பக்கத்திலுள்ள மாணவனின் விடைத்தாளைப் பார்த்து 'காப்பி'யடித்தால்கூட யாருக்கும் தெரியாது. ஆனால், அப்படியோர் அவசியம் எனக்கு ஏற்பட்டதே இல்லை'' என்றான்! அவனுடைய தந்தையார்

# "உங்கள் மகன் நட்சத்திரத்தைப் பிடிக்க முயற்சி செய்ய வேண்டாம். அவனே ஒரு நட்சத்திரம்தான்!"

குறுக்கிட்டு, ''ஏனெனில் அவன் பள்ளியின் நம்பர் ஒன் ஸ்டூடன்ட்'' என்றார்.

ஒரு வழியாக கம்பார்ட்மென்ட் கலகலப்பானது. ''எல்லாம் சரிதான்; ஆனால் நான் ஏன் சிரித்தேன் என்று யாருக்காவது தெரியுமா? என் அப்பா பேப்பரில் ஆங்கிலக் குறுக்கெழுத்துப் போட்டியை நிரப்புவதைப் பார்த்துத்தான் சிரித்தேன். சுவாரஸ்யமில்லாத நிலையைக் குறிக்கும் எட்டெழுத்துச் சொல் monotony (மாறுதலற்றது, சலிப்பூட்டுவது) ஆகும். ஆனால், என் அப்பா அதன் இடத்தில் marriage என்று எழுதியிருக்கிறார்'' என்றான் இளைஞன். அந்தப் பெட்டியிலிருந்த அனைவரும் அதிரடியாகச் சிரித்தனர். அந்த இளைஞன் தன் தந்தையைப் பார்த்ததைத் தான் தவறாகப் புரிந்து கொண்டு விட்டோம் என்பதை உணர்ந்த என் அம்மா, ''உங்கள் மகன் நட்சத்திரத்தைப் பிடிக்க முயற்சி செய்ய வேண்டாம்! ஏனெனில் அவனே ஒரு நட்சத்திரம்தான்!'' என்று சொல்ல, கம்பார்ட்மென்ட் மீண்டும் 'கப்சிப்' ஆனது. அந்த அமைதியில் ஆழம் இருந்தது.

– சொனால் கல்ரா (Sonal Kalra)

தமிழில் : சா. ஜெயராஜ்

நன்றி: 'இந்தியன் எக்ஸ்பிரஸ்'



# விண்மீன்!

# நீங்களும் நடக்கும்!

## 22.7.2007 முதல் 28.7.2007 வரை...

**மேஷம்:** இந்த வாரம் எதிர் பாராத தகவல்கள் வந்து சேரும். வேலையில் இடமாற்றம் ஏற் படும். தடை விலகித் திரு மணம் கைகூடும். கல்வி வளம் மேன்மை பெறும். நீண்ட கால மாக வராத நிலுவைகள் கைக்கு வந்து சேரும். வீடு மாற்றக் கூடிய நிர்ப்பந்தம் ஏற்படும். சனி/குரு/ராகு/கேது வழிபாடு செய்து வர, நற்பலன் உண்டா கும்.

**மிதுனம்:** மன உளைச்சல் தீரும். வாக்கு நாணயம் காப்பாற்றப்படும். மறைமுக எதிர்ப்புகள், தொல்லை இருக்காது. உடல் நிலை சீராகும். தடை விலகித் திருமணம் கைகூடும். மகப்பேறு பாக்கியம் கிட்டும். கடன் சுமைகள் குறையும். சனி/குரு வழி பாடு செய்துவர, நற்பலன் உண்டா கும்.

**கடகம்:** தடை விலகித் திருமணம் கைகூடும். வாக்குவாதத்தைத் தவிர்க்கவும். உணவு விஷயத்தில் கட்டுப்பாடு தேவை.




**ரிஷபம்:** மனத்தில் உற் சாகம் பெருகும். நண்பர், உறவினர்களால் ஆதாயம் கிட் டும். ஆடை, ஆபரண, அலங் காரப் பொருட்கள் வாங்கு வீர்கள். தனம், கல்வி வளம் மேலோங்கும். வேலையில் நற்பெயர் கிட்டும். நீண்ட கால கடன் தொல்லை தீரும். ராகு/கேது வழிபாடு செய்து வர, நற்பலன் பெரு கும்.

யாருக்கும் ஜாமீன் போடக்கூடாது. உத்தி யோகத்தில் வேலைப்பளு அதிகரிக்கும். கொடுக்கல், வாங்கலில் எச்சரிக்கையாக இருக்கவும். ராகு/கேது/சனி வழிபாடு செய்து வர, நற்பலன் கிட்டும்.

**சிம்மம்:** எதிரிகளால் பாராட்டுகள் வந்து சேரும். திருமணம் கைகூடும். கொடுக் கல், வாங்கல் சுமாராக இருக்கும். வேலைப்பளு அதிகரிக்கும். குழந்தைகள் வழியில் சுபநிகழ்ச்சி கைகூடும். அநாவசிய மான செலவுகள் ஏற்படும். ராகு/கேது/

குரு/சனி வழிபாடு செய்து வர, நற்பலன் பெருகும்.

**கன்னி:** வேலையில் ஊதிய உயர்வு கிட்டும். வீட்டில் சுபநிகழ்ச்சிகள் கைகூடும். நீண்ட கால கடன் தொல்லைகள் நீங்கும். நண்பர், உறவினர்கள் வழியில் ஆதாயம் கிட்டும். திடீர்ப் பிரயாண வாய்ப்பு ஏற்படும். குரு வழிபாடு செய்து வர, நற்பலன் கிட்டும்.

**துலாம்:** திருமண காரியம் கைகூடும். நில, புலன் வழியில் ஆதாயம் கிட்டும். சத்ரு தொல்லை விலகும். உத்தியோகத்தில் பதவி உயர்வு, இடமாற்றம் ஏற்படும். வேலையில் நற்பெயர் உண்டாகும். கொடுக்கல், வாங்கல் நன்றாக இருக்கும். திடீர் தனயோகம் கிட்டும். ராகு/கேது/சனி வழிபாடு செய்து வர, நற்பலன் உண்டாகும்.

**விருச்சிகம்:** நீண்ட கால கடன் சுமைகள் குறையும். வெளிநாட்டு அழைப்பு கிட்டும். வேலையில் நல்ல முன்னேற்றம் கிட்டும். வீடு/மனை மூலம் ஆதாயம் ஏற்படும். வியாபாரத்தில் நல்ல முன்னேற்றம் ஏற்படும். நண்பர், உறவினர்களால் ஆதாயம் கிட்டும். ராகு/கேது/குரு வழிபாடு செய்து வர, நற்பலன் பெருகும்.

**தனுசு:** தடை விலகித் திருமணம் கைகூடும். வராத பணம் கைக்கு வந்து சேரும். வேலைப்பளு அதிகரிக்கும். கஷ்டம் இருக்காது. எதிர்ப்பு/ தொல்லைகள் விலகும். உடல்நிலை சீராகும். வேலைப் பளு அதிகரிக்கும். உத்தியோகத்தில் இடமாற்றம் ஏற்படும். சிலருக்கு வெளியூர்ப் பிரயாண வாய்ப்பு வந்து

## பரத்வாஜ் பதில்கள்

**என்** அண்ணனுக்கு வெளிநாட்டுப் பணி நிரந்தரமாகுமா? திருமண வாழ்க்கை எப்படியிருக்கும்?

**- உமா சங்கர், விளாத்திகுளம்**

அண்ணனுக்கு வெளிநாட்டிலேயே வேலை செய்யும் வாய்ப்பு இருக்கிறது. இவருக்கு 2007ல் திருமணம் கைகூடும். எதிர்காலம் நன்றாக இருக்கும்.

**என்** மகனுடைய குடும்ப வாழ்க்கையைப் பற்றிச் சொல்லுங்கள்...

**- வெங்கடாசலம், திருக்கானூர்பட்டி**

உங்கள் மகன் ஜாதகப்படி தற்போது சனி தசை நடைபெற்று வருகிறது. சனி தசை ராஜயோகத்தை அளிக்கும். வீடு/வாசல் வாஸ்து நல்ல செல்வச் செழிப்புடன் இருக்கும். புதிய தொழில் முயற்சி நற்பயனைத் தரும்.

# தஞ்சை பரத்வாஜ்

கல்வி வளம் மேலோங்கும். வியாபாரத்தில் முன்னேற்றமான சூழ்நிலை ஏற்படும். உடல்நிலை சீராகும். குரு/சனி வழிபாடு செய்துவர, நற்பலன் உண்டாகும்.

**மகரம்:** எதிலும் கவனத்துடன் செயல்பட்டால் நல்லது. யாருக்கும் ஜாமீன் போடக் கூடாது. சிலருக்குத் தொழில் மாற்றம் ஏற்படும். சிலருக்கு வீடு மாற்றம் ஏற்படும். ராகு/கேது/சனி வழிபாடு செய்து வர, நற்பலன் உண்டாகும்.

**கும்பம்:** மனக்குழப்பம் தீரும். பணச் சேரும். வழக்கு வெற்றி அளிக்கும். ராகு/கேது/குரு வழிபாடு செய்துவர, நற்பலன் கிட்டும்.

**மீனம்:** மேல்நாட்டு அழைப்பு கிட்டும். சுப நிகழ்ச்சி கைகூடும். வியாபாரத்தில் நல்ல முன்னேற்றம் ஏற்படும். சிலருக்கு வீடு/மனை வாங்க உகந்த காலம். வாக்கு நாணயம் காப்பாற்றப்படும். கல்வி வளம் மேலோங்கும். சனீஸ்வர வழிபாடு செய்து வர, நன்மை பயக்கும்.



நீரக் கூந்தலை ஃபேன் காற்றில் உலர்த்திக் கொண்டிருந்தாள் உத்ரா. வெளியே ஆட்டோ வந்து நிற்கும் சப்தம் கேட்டது.

உத்ராவின் மனம் உவகையால் துள்ளியது. பல மாதங்களாக இருந்து வந்த 'மாமியார் தலைவலி' இன்றோடு தொலைந்தது!

சற்றுமுன் அவள் போட்ட முழுக்கு... தலைக்கு மட்டுமல்ல, தன் மாமியாருக்கும் தான் என்பதை நினைக்க நினைக்க... பரவசமடைந்தாள்.

உத்ராவின் கணவன் நித்யனுக்கு அம்மா என்றால் உயிர். பூ விற்றுத்தான் மகனைப் படிக்க வைத்தாள். மாநில அளவில் முதல் மதிப்பெண் பெற்றதால் முதல்வரின் நிதி உதவியில் மேல் படிப்பை முடித்து, கையோடு நல்ல வேலையிலும் நச்சரிப்பு.

மனப் போர்க்களத்தில் நிராயுதபாணியாய் நிற்கத் தெம்பில்லை நித்யனுக்கு. பொறுத்துப் பொறுத்துப் பார்த்தவன், ஒரு கட்டத்தில் உத்ரா சொன்னதை நிறைவேற்றப் புறப்பட்டான்.

இதோ, ஆட்டோவுடன் வந்து விட்டான் கணவன். மாமியார் இருந்த அறையைச் சுத்தப்படுத்தி, தன் விருப்பப்படியே தனது விருந்தினர் தங்கும் அறையாக மாற்றிவிட வேண்டும் என நினைத்தவள், உடை மாற்றிக் கொண்டு வெளியே வந்தாள். ஆட்டோவைப் பார்த்ததும் அலறிவிட்டாள்.

''அப்பா!''

உத்ராவின் அப்பாவைக் கைத்தாங்கலாக அழைத்து வந்தான் நித்யன்.

# உத்ராவின் அப்பா!

சேர்ந்து விட்டான்.

'பூக்காரியின் மகன்' என்கிற பெயரும் அடைமொழியும் அம்மாவைப் பற்றின பெருமிதத்தை உயர்த்திக் காட்டின.

அவனுக்காக உழைத்த அம்மா உடல் நிலை பாதிக்கப்பட்டு... படுக்கையில் வீழ்ந்து விட்டாள். அவளுக்குரிய எல்லா சேவைகளையும் நித்யன்தான் செய்தான்.

ஆனாலும்... அந்த வீட்டின் வேண்டாத பொருள்களில் ஒன்றாகவே அம்மாவை நினைத்துவிட்டாள் உத்ரா.

எந்த விதத்திலும் ஒத்துவராத மனைவியாக அமைந்து விட்டாள். அவளும் நித்யனும் சிங்கமும் ஆடுமாகவே வாழ்ந்து வந்தனர். மனோ ரணங்களின் ஆழமான வலியினைத் தாங்கிக்கொள்ளப் பழகிவிட்டான் நித்யன்.

''உங்க அம்மாவைக் கட்டாயம் முதியோர் இல்லத்தில் சேர்த்து விட்டுடணும்'' என்று கடந்த சில மாதங்களாகவே தொடர்



''அப்பா... என்னப்பா ஆச்சு?'' எனக் கேட்டபடியே ஓடிவந்து, தானொரு பக்கம் தாங்கிக் கொண்டாள்.

''பலன் தருகிறவரையில்தானம்மா பாசம். பலன் குறைந்து விட்டால் முதுமை சுமையாகிவிடுகிறது. உனது அண்ணன்களை டாக்டராய், இன்ஜினீயராய் உருவாக்க நான் என்ன பாடுபட்டிருப்பேன்! ஆனால், அந்தக் கோழைகள் மனைவிகளின் பேச்சைக் கேட்டு என்னை முதியோர் இல்லத்துக்கு அனுப்பிவிட்டார்கள். அங்குதான் மாப்பிள்ளையைப் பார்த்தேன்.

வீட்டுக்குக் கூட்டி வந்து விட்டார்'' என்றார். அவரது கண்கள் தளும்பியிருந்தன.

நித்யன் நிமிர்ந்து உத்ராவைப் பார்த்தான். அவளுடைய தலை தாழ்ந்திருந்தது. ●



## ரை ரைட்ஸ்!

'தலைநகரம்' தந்த வெற்றி சுந்தர் சி.க்கு 'ரைட்' என்ற அடைமொழியை ஒட்ட வைத்தது. அடுத்து பத்ரியின் இயக்கத்தில் 'வீராப்பு'. இதிலும் ரௌடி வேடம்தானாம்.

"நான் நினைச்சே பாக்கல ஹீரோ வாவேன்னு. இப்ப டைரக்ஷனைக்கூட ஒதுக்கி வைச்சுட்டு தொடர்ந்து நடிப்புல பிசியா இருக்கேன். ஆனா, இயக்குற தவிப்பு அடிமனசுல அப்படியேதான் இருக்கு. 'வீராப்பு'ல நல்ல ரோல். தலைநகரம் 'ரைட்' மாதிரி இந்தப் பட புலிப்பாண்டியும் பொங்கப் போறான் பாருங்க'' என்று புல்லரிக்கிறார்.

சுராஜ், பத்ரி என்று தொடர்ந்து சிஷ்யர்களின் படங்களிலேயே நடிப்பது பற்றிக் கேட்டால்,

"நல்ல கதை இருந்தா சொல்லுங்க, நாமளும் சேர்ந்து பண்ணுவோம்'' என்று நம்மையே திகைக்க வைக்கிறார்.

- மீனாட்சி

வெ. தமிழழகன்




# மாமதுரை

**கா**மெடி நடிகர் சிங்கமுத்து தெரியும்ல... அவரோட மவன் வாசன் கார்த்திக் ஹீரோவா வேஷம் கட்டி வந்திருக்கிற படம்தான் மாமதுரை. அட, கதையும் அங்கதான் நடக்குது. தாய்ப் பாசத்தையும் காதலையும் கொழைச்சித் தந்திருக்காரு டைரக்டர் கே.கே.கிருஷ்ணன்.

வாசனுக்கு இது மொத படம் மாதிரி தெரியல. புகுந்து விளையாடுறாரு. டான்ஸ் நல்லா வருது. சோகத்துல இன்னும் அழுத்தம் வேணும். கலகலப்புல கம்பு நாட்டுறாரு. அவருக்கு சோடியா மதினான்னு ஒரு பொண்ணு. நாயகிக்கேத்த மாதிரி டைரக்டர் மோல்டு பண்ணியிருக்காரு. படத்த தூக்கி நிறுத்துறது காமெடிங்கதான். கருணாஸும், மயில்சாமியும் ஒரு பக்கம் வெளுத்து வாங்க, இன்னொரு பக்கம் வடிவேலு வெடிவேலுவாவே மாறிடறாரு. அதிலும் செருப்பு தைக்க வந்த பொம்பளகிட்ட பண்ற அலம்பல் அதகளம். வில்லனா வர்ற கோட்டைக்குமாருக்கு இன்னும் அனுபவம் வேணும். வசனத்தை இழுத்து இழுத்துப் பேசறது நல்லால்ல. சீதாவோட நடிப்புல அமைதி தவழுது. பணத்துக்காக ஏங்கும்போது பரிதவிக்க வைக்கிறாங்க. கொஞ்ச நேரமே வந்தாலும் டெல்லிகணேஷ் நெஞ்சம் நிறையறார்.

இசை கார்த்திக்ராஜா. 'அடக்கி வாசி', 'அஸ்கலக்காலே' குத்தாட்டம் போட வைக்குதுன்னா, இளையராஜா குரல்ல 'மதுர மதுரதான்' ரம்மியமா இருக்கு. கொடைக்கானல் காட்சிகள்ல ஒளிப்பதிவு ஓ.கே. இதை முழு நீள நகைச்சுவைப் படமா பண்ணியிருந்தா தப்பிச்சிருக்கும். காதல்தான் படம்னு பார்த்துட்டிருந்தா, அம்மா செண்ட்டிமெண்ட்னு திடீர்னு திசை மாறிப் பயணிக்குது திரைக்கதை. சரி, என்னமோ நடக்கப் போகுதுன்னு பார்த்தா புஸ்ஸுனு போயிடுது. அழுத்தமில்லாத க்ளைமாக்ஸ்.

– சித்ரா

ஆழ்வார்கள் மிக அரிதாகத்தான் அரசர்களைப் புகழ்வார்கள். அரசர்களுக்கு அரசனாக திருமால் இருக்கும்போது சின்னச் சின்ன மன்னர்களைப் பாடுவது அவர்களுக்கு உவப்பில்லை.

விதிவிலக்காக திருமங்கை ஆழ்வார் தன் பெரிய திருமொழியில் ஒரு சோழ மன்னனின் வெற்றியைப் பாடியிருக்கிறார். விண்ணி என்னும் இடத்தில் நடந்த கடும்போரைக் குறிப்பிட்டு, அதில் சோழராஜா வெற்றி கண்ட திருநறையூரை அடைவீர்கள் என்று குறிப்பிடும்போது, அரிதாக ஒரு சரித்திரக் குறிப்பு கிடைக்கிறது. இந்த அரசன் யார் என்று அன்பர்கள் ஆராயலாம்.

இந்தப் பாடலின் முதல் பகுதியில் மகாவிஷ்ணுவின் உலகளாவிய வடிவை மிக அழகாக ஆழ்வார் சொல்லும்போது, அவர் கற்பனையின் விஸ்தாரம் நமக்குப் பிரமிப்பளிக்கிறது.

பவ்வநீர் உடைஆடை யாகச் சுற்றிப்
பார்அகலம் திருவடியா பவனம் மெய்யா
செவ்விமாதிரம் எட்டும் தோளா அண்டம்
திருமுடியா நின்றான்பால் செல்ல கிற்பீர்
கவ்வைமா களிறு(உ)ந்திவிண்ணிஏற்றக்
கழல்மன்னர் மணிமுடிமேல காகம் ஏற
தெய்வவாள் வலங்கொண்ட சோழன் சேர்ந்த
திருநறையூர் மணிமாடம் சேர்மின்களே





எட்டுத் திசைகளும் தோளாகவும், அண்ட சராசரம் முழுதும் தலையாகவும் நிற்கின்ற திருமாலினிடத்தில் செல்ல விரும்புகிறீர்களா?

(பவ்வம் - கடல், பவனம் - காற்று, மாதிரம் திசை, கவ்வை - ஆரவாரம்)

கடலை ஆடையாகச் சுற்றி பூமியின் அகலத்துக்குத் திருவடிகளும் காற்று மேனியாகவும் எட்டுத் திசைகளும் தோளாகவும் அண்ட சராசரம் முழுதும் தலையாகவும் நிற்கின்ற திருமாலினிடத்தில் செல்ல விரும்புபவர் களே! விண்ணி என்ற இடத்தில் ஆரவார யானைகள் தலையை இடற, பகைவரைக் கொன்று மன்னரின் கிரீடங்களின் மேல் காகங்கள் உட்கார, வாள் வீசிய சோழ ராஜாவின் திருநறையூருக்குச் சென்று தரிசியுங்கள்.

இந்த திருநறையூருக்கு மற்றொரு கதை உண்டு. மகாலட்சுமி ஒருமுறை கோபித்துக் கொண்டு பாற்கடலிலிருந்து புறப்பட்டு இந்த ஊருக்கு வந்து மேதாவி என்கிற மகரிஷியிடத்தில் தங்கிவிட, பெருமாள் அவரைத் தேடிக்கொண்டு வந்தாராம். மகாலட்சுமிக்கும் பிரச்னைகள்; கோபம் வந்திருக்கிறது.

(படிக்கலாம்)

# அருள்வாக்கு

'**போ**ச்சு போச்சு! கலியில் எல்லாம் போச்சு! ஏதாவது கொஞ்சம் மிச்சமிருந்தாலும் அதுவும் கால ஓட்டத்தில் போயே போயிடும். எல்லாம் மிருகப் பிராயமாயிடும்' என்று புராணங்கள் பயமுறுத்துகின்றனவென்றால், நாம் மெத்தனமாக இருந்துவிடக் கூடாது என்று எச்சரித்து உசுப்பிவிட்டு உஷார்ப் படுத்துவதற்குத்தான்; ரொம்பவும் ஆபத்தாக வர்ணித்தால்தான் நாம் அசைந்து கொடுப்போம் என்பதால்தான். 'கலிதான் அதர்ம யுகமென்றால் நாம் அதர்மமாகத்தான் இருந்துவிட்டுப் போவோமே!' என்று சொல்வது தப்பு. 'திருடர்கள் ஆபத்து ஜாஸ்தி இருக்கிறது' என்று போலீஸ் தண்டோரா போட்டால் என்ன செய்வோம்? திருடர்கள் வந்து எடுத்துக்கொண்டு போகட்டும் என்று நாமே நமது உடைமைகளைத் தெருவில்




போட்டுவிட்டா உட்கார்ந்து கொண்டிருப்போம்? 'முடிந்தவரையில் காப்பாற்றிக் கொள்வோம்' என்றுதானே ஜாக்ரதை செய்துகொள்வோம்? போலீஸ் தண்டோரா போட்டதன் நோக்கமும் இப்படி ஜாக்ரதை செய்து, முடிந்தமட்டும் காப்பாற்றிக் கொடுப்பதற்குத்தானே? 'கலி அதர்ம ஆட்சியை ஆரம்பித்துவிட்டான்' என்று சாஸ்த்ரங்கள் தண்டோரா போடுவதும் இதே மாதிரிதான். கூடிய மட்டும் தர்மத்தை ஜாக்ரதையாகக் காத்துக்கொள்ள வேண்டும் என்று உஷார்படுத்தத்தானே தவிர, எதுவுமே செய்வதற்கில்லை என்று எல்லாவற்றையும் கைவிடுவதற்காக அல்ல!

இந்த யுகத்தில் வரும் அதர்ம ப்ரவாஹத்தை ஒருவன் எதிர்த்து நின்றால்தான் மற்ற யுகங்களில் செய்யும் தர்மாநுஷ்டான பலனைவிட கோடி மடங்கு பலன் பெறலாம். எதிர்ப்பு உண்டான மையத்தில் தடுத்து நின்றால்தான் பெருமை அதிகம்.

– ஜகத்குரு காஞ்சி காமகோடி ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சார்ய ஸ்வாமிகள்

# பங்காளிப்

ன்று சிவில் கோர்ட்டுகளில் தேங்கிக் கிடக்கும் வழக்குகளில் பெரும் பாலானவை சொத்துகள் குறித்தவை தான். இவை குறைய வேண்டுமானால் சொத்துக்கு உரிமையாளர் இறப்பதற்கு முன் உயில் எழுதிவிடவேண்டும்.

● 'ஐந்து வயதில் அண்ணன் - தம்பி; பத்து வயதில் பங்காளி' என்று கிராமப் புறங்களில் பேச்சுவழக்கு உண்டு. பங்காளி என்றாலே, சொத்துத் தகராறு, அரிவாள் வெட்டு, கொலை என்று தொடர் நிகழ்வுகளுக்கும் வாய்ப்பு உண்டு. எனவே குடும்பப் பெரியவர்கள், தாங்கள் இறக்கும் முன்னரே, 'என்னுடைய இன்னின்ன சொத்துகள் இன்னின்னாருக்கு' என்று உயில் எழுதி வைப்பது பின்னாளில் பல பிரச்னைகளைத் தவிர்ப்பதற்குச் சிறந்த வழியாகும். இறக்கும் தருவாயில்தான் உயில் எழுத வேண்டும் என்பது அவசியமல்ல; நன்றாக இருக்கும்போதும் எழுதி வைக்கலாம்.

● ஒருவர் தனது வாழ்நாளில் சொத்துகளைக் குறித்து ஒன்பது உயில்கள்கூட எழுதலாம். ஆனால், இறப்பதற்கு முன், கடைசியாக எழுதிய உயில்தான் செல்லுபடியாகும்.

● இருபது ரூபாய் கோர்ட் ஸ்டாம்ப் பேப்பரில் தனது சொத்துகளைப் பற்றி விரிவாக எழுதி யார், யாருக்கு எந்தெந்த சொத்து சேர வேண்டும் என்பதையும் தெளிவாகக் குறிப்பிட வேண்டும். பரம்பரையாக வரும் குடும்பச் சொத்தில் வாரிசு எல்லோருக்கும் பங்கு உண்டு. ஆனால் சுயமாகச் சம்பாதித்த சொத்து என்றால் அதை அனாதை இல்லங்களுக்கோ அல்லது சம்பந்தமில்லாத நபருக்கோ எழுதி வைக்கும் உரிமை சொத்து உரிமையாளருக்கு உண்டு. பரம்பரைச் சொத்தை மூலதனமாகக் கொண்டு சம்பாதித்த சுய சொத்தும், பரம்பரைச் சொத்தின் அடிப்படையில் வந்ததாகவே எடுத்துக் கொள்ளப்படும்.



● உயில் என்பது ஒருவரால் தானாகவே சுய புத்தியுடன் எழுதப்படுவது. இந்த நிலையில் எழுதுவதாகக் குறிப்பதுடன், இரண்டு முக்கிய நபர்களின் சாட்சிக் கையெழுத்துகளையும் உயிலில் பெற வேண்டும். வழக்கறிஞர் துணையுடன் உயிலைத் தயாரிப்பது உசிதமானது.

● எழுதிய உயிலை சார்பதிவாளர் அலுவலகத்தில் பதிவு செய்ய வேண்டும். அப்போதுதான் அது செல்லுபடி ஆகும். சென்னை நகரைச் சேர்ந்தவர்கள் என்றால், உயர்நீதிமன்றத்தில் பதிவு செய்த உயிலைச் சமர்ப்பித்து அங்கீகாரம் (probate) பெற வேண்டும்.

● தாம் எழுதிய உயிலை தமது இறப்புக்குப் பிறகே அனைவரும் பார்க்க வேண்டும் என்று ஒருவர் நினைத்தால், அதன்படியே எழுதி கவரில் போட்டு, சீல் செய்து வைத்து விடலாம்.

● மூத்த மகனுக்கு ஒரு வீட்டை முழுதாக எழுதி வைத்து விட்டீர்கள். பிறகு இளைய மகனுக்கு அதே வீட்டில் ஒரு பகுதியைக் கொடுக்க விரும்பினால், உயிலுக்கு codicil என்ற இணைப்பை உருவாக்கி, அதையும் பதிவு செய்து விட வேண்டும்.

● உயில் மூலமாக வரும் அசையாத

சொத்துகளை உங்கள் பெயரில் மாற்றிக் கொள்ள, பின்னாளில் தேவையானது வாரிசுச் சான்றிதழ். இதனுடன், உயில் நகலை இணைத்து முறையாக விண்ணப் பித்தால், உள்ளாட்சி அலுவலகங்களில் சொத்துகளை உங்கள் பெயரில் மாற்றி விடுவார்கள்.

● உயிலை எழுதி வைத்தவுடன் தமது இறப்புக்குப் பிறகு, அது சரியாக அமல் படுத்தப்படுமா என்று சந்தேகம் இருந் தால், அதை அமல்படுத்த executor-ஐ நியமிக்கலாம். அதையும் உயிலில் குறிப் பிட வேண்டும்.

● அசையும் சொத்துகளான பணம், நகைகள், வண்டி போன்றவற்றையும் உயில் சொல்லும் விதத்தில் பங்கு போட்டுக் கொள்ளலாம். ஆனால் சகோதர, சகோதரிகளுக்குள் தகராறு வந்தால், நீதிமன்றத்தை நாடி சக்செஷன் சட்டப்படி உத்தரவு பெற்று பங்கு போட்டுக் கொள்ள வேண்டும்.

● 1988-ஆம் ஆண்டு முதல் இந்து குடும்பங்களில் பெண் வாரிசுகளுக்கும் சொத்தில் பங்கு உண்டு. அதேபோல கடனிலும் பங்கு உண்டு.

# பிரச்னை தீர...

**ஒருவர் ஒன்பது உயில்கள் கூட எழுதலாம். ஆனால் இறப்பதற்கு முன் கடைசியாக எழுதப்படும் உயில்தான் செல்லுபடியாகும்!**

● இதுவரை நாம் சொன்ன உயில் விஷயங்கள் இந்து சமயத்தைச் சேர்ந்தவர் களுக்குத்தான். முஸ்லிம் மற்றும் கிறிஸ்தவ மதங்களைச் சேர்ந்தவர்களின் சொத்துக் களைப் பங்கு பிரிப்பதற்கென்று தனிச் சட்டங்கள் உள்ளன.

- கௌசி

# எங்கே யூதர்கள்?



யூதர்கள் எங்கே? எங்கே போய் விட்டார்கள் அவர்கள்? அவர்களுடைய மொழி எங்கே? கலாசாரம் எங்கே? அவர்களுக்கென்றே பிரத்யேகமாக தேவாலயம் ஒன்று இருக்குமே, அதன் பெயர் என்ன? ஆங்... சினகாக் (Synagogue!) எங்கே அது? ஆண்களும் பெண்களும் குழந்தைகளுமாக இங்கேதானே பரவிக்கிடந்தார்கள்; இங்கேதானே வீடு கட்டி வாழ்ந்தார்கள்; இங்கேதானே வண்ணமயமாக வளைய வந்தார்கள்- ஆயிரக் கணக்கில், மில்லியன் கணக்கில்? இப்போது மருந்துக்குக்கூட ஒருவரையும் காண முடியவில்லையே... எங்கே?

போலந்து தேசத்தின் தற்போதைய கவலை இதுதான். இந்தக் கவலையோடு க்ராகோவ் (Krakow) என்னும் பகுதியில் ஒன்று கூடினார்கள். கேளிக்கை, கும்மாளம், ஆர்ப்பாட்டம் என்று கொண்டாடிக் களைத்துப்போனார்கள்.

யூதப் பாடல்கள். யூத இசை. Hasidic dancing என்று பெயர். ஒருவர் தோள்மீது இன்னொருவர் கைவைத்து, கிட்டத்தட்ட ரிங்கா ரிங்கா ரோஸஸ் ரீதியில் வட்டமாகச் சுற்றி வந்து ஆடும் ஆட்டம்.

குறைந்தது 200 நிகழ்ச்சிகள் ஒவ்வொன்றாக அரங்கேற்றப்பட்டன. யூதக் கலாசாரத்தில் கரைகண்ட பெரியவர்கள் மைக் பிடித்துப் பேசினார்கள். அரசியல் பிரச்னைகளைப் பற்றி. அவர்களது வளமான பழைய வரலாற்றைப் பற்றி. யூத கலாசாரத்தைப் பாதுகாக்க வேண்டும், பரப்ப வேண்டும். க்ராகோவ் கொண்டாட்டங்களின் அடிநாதம் இதுதான்.

மொத்தம் 13,000-க்கும் அதிகமானவர்கள் திரண்டுவிட்டார்கள். எல்லோரும் போலந்துவாசிகள்தாம். போலந்து அரசாங்கமும் வேறு சில அமைப்புகளும் ஒன்று சேர்ந்து இந்தக் கொண்டாட்டத் திருவிழாவை நடத்தியிருக்கின்றன.

கிட்டத்தட்ட ஐரோப்பா முழுமைக்கும் செய்தி பரவிவிட்டது. ஐரோப்பியர்களுக்கு ஆச்சரியம்! 'அட, என்னதான் செய்கிறார்கள் பார்ப்போமே' என்ற ஆவலில் ஏரோப்ளேன் ஏறி கும்பல் கும்பலாக க்ராகோவில் குவிந்துவிட்டார்கள்.

சும்மா சொல்லக்கூடாது. அமைப்பாளர்கள் நிறையவே மெனக்கெட்டு வெகு விமரிசையாகவே கொண்டாட்டத்தை நடத்தியிருக்கிறார்கள். தினசரி ஏழு புராதன தேவாலயங்களுக்குப் பிரத்யேகச் சுற்றுப் பயணம். பிறகு, கல்லறைகள். பிறகு, போலந்தைச் சுற்றிப் பார்க்கும் வைபோகம். வழி நெடுக, யூதர்களைப் பற்றிக் கதை சொல்லிக் கொண்டே வருவார்கள். யூதர்களைப் பற்றி எந்தச் சந்தேகம் வந்தாலும்



அவர்களிடம் கேட்கலாம். யூதர்கள் குளிக்கவே மாட்டார்கள் என்பது உண்மையா? ஹிட்லர் ஏன் யூதர்களை வெறுத்தார்? ஏன் அவர்களைக் கொன்று ஒழித்தார்? இயேசுநாதரைக் கொன்றவன் ஒரு யூதனா? உலகெங்கும் செல்வந்தர்களாக இருப்பவர்களும் யூதர்கள்தானா? எது வேண்டுமானாலும் கேட்கலாம். நேரமும் பொறுமையும் இருக்கும்வரை விளக்குவார்கள்.

யூதர்கள் மீது காதல் ஏற்பட்டு அவர்களைப் பற்றி இன்னமும் அதிகம் தெரிந்து கொள்ள வேண்டும் என்று விரும்புபவர்களுக்குப் பிரத்யேகப் பயிற்சி வகுப்புகள். ஹீப்ரு மொழி அடிப்படைகள். யூதர்களைப் பற்றி வெளிவந்த திரைப்படங்கள். எஞ்சியிருக்கும் கலாசார அடையாளங்கள். ஓவியங்கள். புத்தகங்கள். நடன வகுப்புகள். யூத எழுத்தாளர்களைச் சந்தித்து உரையாடுவதற்கான வாய்ப்புகள். யூத சமையற்கலை. இன்னமும் நிறைய.

திரண்டிருந்தவர்களில் 85 சதவிகிதத்துக்கு மேற்பட்டவர்கள் ஐரோப்பியர்கள். வந்திருந்த ஒன்றிரண்டு யூதர்களைப் பார்க்கும்போதெல்லாம் ஆர்வத்துடன் முன்னுக்கு நகர்ந்து சென்று கைகுலுக்கி மகிழ்ந்தார்கள். நிறைய பேசினார்கள்.

போலந்தின் மிகப் பழைமையான நகரம் க்ராகோவ். பல பழைமையான யூத தேவாலயங்கள் அமைந்துள்ள பகுதி. இரண்டாம் உலகப் போருக்கு முன்பு வரை க்ராகோவில் மொத்தம் 70,000 யூதர்கள் குடியிருந்தனர். இன்று 300 பேர் இருந்தால் ஜாஸ்தி.

க்ராகோவிலுள்ள முக்கிய மாவட்டம் Kazimierz. யூதர்கள் இங்கே கால் பதித்தது பதினான்காம் நூற்றாண்டில். அப்போது அங்கே பெரும்பான்மையாக இருந்தவர்கள் கிறிஸ்தவர்கள். ஆனால் என்ன? யூதர்கள் அவர்களுடன் கைகோத்துக் கொண்டு மகிழ்ச்சியுடன் வாழ்க்கை





பிடித்துக் கொண்டு தனித் தனியே பிரிந்து ஓடினார்கள்.

**யூ**தர்கள் இல்லாத போலந்து. வெறுமையான போலந்து. நினைவுகளைத் தாங்கி நிற்கும் போலந்து. தாங்கிக்கொள்ள முடியவில்லை மக்களால். என்ன செய்யலாம் என்று யோசித்தார்கள். யூதர்கள் நினைவாக ஏதாவது செய்யலாம் என்று முடிவு செய்தார்கள். யூதர்கள் கலாசார விழா (Jewish Culture Festival) தொடங்கப்பட்டது அப்போது தான். இது நடந்தது 1988-ஆம் ஆண்டு. ஒவ்வோர் ஆண்டும் ஜூன் இறுதியில் அல்லது ஜூலை தொடக்கத்தில் இந்த விழா ஆரம்பமாகும். மொத்தம் ஒன்பது நாட்கள். உலகெங்கிலுமிருந்து யூதர்கள் பலர் இங்கே வந்து கூடுவது வழக்கமாகி விட்டது.

Joanna Kruczak என்னும் 32 வயது கத்தோலிக்கப் பெண்மணி தொடர்ந்து நான்கு ஆண்டுகளாக இந்த விழாவில் பங்கேற்றுக் கொண்டிருக்கிறார். 'எதற்காக இங்கே வருகிறீர்கள்?' என்று கேட்டதற்கு அவர் அளித்த பதில் இது: 'யூதர்களை நான் நீண்ட காலமாக வெறுத்து வந்திருக்கிறேன். இங்கே வந்த பிறகுதான் அவர்களது வலி, அவர்களது சரித்திரம் இரண்டும் புரிகின்றன. குழந்தைகள், பெரியவர்கள், ஆண்கள், பெண்கள் அனைவரும் இங்கே வந்து பார்க்க வேண்டும். அப்போதுதான் பல விஷயங்கள் புரியும் - அவர்களுக்கு. பல மாற்றம் ஏற்படும்.'

ஐரோப்பியர்கள் மாறியிருக்கிறார்களோ இல்லையோ, க்ராகோவ் நிறையவே மாறியிருக்கிறது. சிதிலமடைந்த யூத ஆலயங்கள் புதுப்பிக்கப்பட்டுள்ளன. கல்லறைகள் பராமரிக்கப்படுகின்றன. இந்த விழாவை நடத்துபவர்கள் கூறுவது இதைத்தான்: 'யூதர்களைத்தான் எங்களால் காப்பாற்ற முடியவில்லை.குறைந்தது அவர்களது கலாசாரத்தையாவது பாதுகாக்கிறோம்.' ●

## ஐரோப்பியர்கள் மாறியிருக்கிறார்களோ இல்லையோ... க்ராகோவ் நிறையவே மாறியிருக்கிறது!

யைத் தொடங்கினார்கள். பாடல்களை இயற்றினார்கள். புதிய டொய்ங் இசைக் கருவிகளை உருவாக்கினார்கள். நன்றாகச் சம்பாதித்தார்கள். நன்றாகச் செலவழித்தார்கள்.

**ஹி**ட்லர் மட்டும் தான் உண்டு தன் குட்டி மீசை உண்டு என்று இருந்திருந்தால், இரண்டாம் உலகப் போர் மட்டும் நடந்திராமல் இருந்திருந்தால், இன்று யூதர்கள் க்ராகோவ் முழுவதும், போலந்து முழுவதும் நீக்கமற நிறைந்திருப்பார்கள். ஐரோப்பாவிலேயே அதிக எண்ணிக்கையில் யூதர்கள் வாழ்ந்து வந்தது போலந்தில்தான். ஆனால், ஹிட்லர் சரித்திரத்தை மாற்றி எழுத விரும்பினார். மூன்று மில்லியனுக்கும் அதிகமான யூதர்கள் கொல்லப்பட்டனர்.

யூதர்கள் உடைந்துபோனார்கள். அவர்களுடைய வீடுகள் கொள்ளையடிக்கப்பட்டன. துவம்சம் செய்யப்பட்டன. விட்டால் போதும் என்று உயிரைக் கையில்

# லேடனின் லேடி!



**நா**லு தடவை யோசிக்காம, நாலு பேர் என்ன சொல்வாங்கன்னு அலட்டிக்காம ஒஸாமாவோட நாலாவது பிள்ளையைக் கல்யாணம் பண்ணிக்கொண்ட பிரிட்டிஷ் புது மணப்பெண்ணுக்கு வயசு ஒண்ணும் அப்படி அதிகமில்லை. 51தான். பேரு திரு'நரை'ச்செல்வி ஜேன் ஃபெலிக்ஸ் ப்ரௌன். இங்கிலாந்து செஷையரில் ஒரு கௌன்சிலர்.

ஏற்கெனவே ஐந்து கல்யாணம் ஆகி, மூணு பிள்ளை, ஐந்து பேரக் குழந்தைகள்னு கல்யாண குடும்ப விஷயங்கள்ல நல்ல சர்வீஸ் போட்ட இந்தப் பாட்டி, சிகிச்சைக்காக எகிப்து வந்தபோது, ஒசாமா பின் லேடனின் இளவல் ஓமர் லேடன், ப்ரௌனியின் அழகில் மயங்கித் தலைக்குப்புற விழுந்தார். அவரும் ஏற்கெனவே மணமாகி இரண்டு வயதில் குழந்தை உள்ளவர்.

இந்நிலையில், தன்னோட வில்லங்கமான மாமனார் பின் லேடனைப் பார்த்து ப்ரௌன் ஒரு வரம் கேட்டால் எப்படியிருக்கும்?

**க**ல்லுக்குள் தேரையைப் போலப் பதுங்கி இருக்கும் ஒசாமாவின் குகை. அம்புலிமாமா, ஹாரி பாட்டர் கதைகளை விஞ்சும் வகையில் பல தடைகளைத் தாண்டி தம் முன் வந்து நின்ற சீனியர் பெண்மணியைப் பார்த்து ஒசாமா ஆச்சரியப்படுகிறான். அவனது வலது, இடது பக்கத்தில் இரண்டு நெட்டை டாலி(ஃ)பான்கள் நின்று விசிறுகிறார்கள்.

''யார் நீ?'' ஒசாமாவின் குரல் உரசிய உப்புக் காகிதமாக கரகரக்கிறது.

''ஒசாமா மாமா! நான் உன்னோட மேல் நாட்டு மருமகள்யா. போன வாரம் கல்யாணம் ஆச்சு. எப்போ தெரியுமா? ஆச்சர்யப் படுவே. டாண்ணு ஒன்பது பதினொண்ணுக்கு.''

ஜே.எஸ்.ராகவன்

''என்னது, நைன் லெவனா? சப்ப்-பாஷ்! அப்படிப்போடு! மருமகளே, என்ன வேணும் உனக்கு? கேள், தர்றேன்.''

''எனக்கா? எனக்கு நீ ஒரு வரம் தரணும்யா.''

''என்னம்மா வரம்னு குண்டைத் தூக்கிப் போடறே. அந்த வேலை எல்லாம் எங்க ளோடதாச்சே... சரி தர்றேன், கேளு.''

''எத்தனை நாள் இப்படி மிரட்டிட்டு இருக்கப் போறே. வெளில வந்து தைரியமா சண்டை போடுய்யா. மறைஞ்சு தாக்கா தேய்யா.''

ஒசாமாவின் கண்கள் சிவக்கின்றன. தேனடை தாடியைக் குரூரமாக உருவ ஆரம் பிக்கிறான்.

''எங்க ஊரு இங்கிலாந்தை விடுய்யா; குட்டித் தீவு. அதோட இப்போ உன் சம்பந்தி ஊராப் போச்சு. அமெரிக்காவை எடுத்துக் கோய்யா.''

அமெரிக்கா என்ற வார்த்தையைக் கேட் டதும் ஒசாமாவின் கண்கள் எரிதணல்களாகச் சிவக்கின்றன. அந்த வெப்பத்தில் கருகாமல் இருக்கத் தாடி இன்னும் வேகமாக உரு வப்படுகிறது.

''உன் கோவம் புஷ் மேலன்னா அவரைப் புடிச்சு ஒரு உலுக்கு உலுக்குய்யா. அப்பாவி மக்களை எல்லாம் ஏன்யா கொல்றே? நான் கேக்கப் போற வரம் என்னான்னா...?''

மாயாவி ஒசாமா ஈசான்ய மூலையி லிருந்து ஒரிஜினல் இடத்துக்கு வந்து காது களைக் கூர்மையாக்கிக் கேட்கிறான்.

''புஷ்ஷோட ஒண்டிக்கு ஒண்டியா நிக்க நீ ஒத்துக்கணும்.''

ஒசாமா எழுந்து நிற்கிறான். ''அண் டர்டேக்கரும், ஹிட்மேனும் மடக்கின ஸ்டீல் சேரால அடிச்சிண்டு டபிள்யூ. டபிள்யூ.ஃஎப்.-ல போடற பாவ்லா சண்டை மாதிரியா?''

''சேச்சே... இல்ல.''

''ரியல் சண்டையா? நான் அப்போ தயார். எங்கே? மன்ஹாட்டன்லேயா? கேம்ப் டேவிட்லேயா? என்னிக்கு? எத்தனை மணிக்கு? ஆயுதத்தோடயா? இல்லே வெறும் கையாலேயா?'' முறம் மாதிரி இரண்டு கைகளைப் பிரித்துக் காட்டுகிறான்.

''அப்படி எல்லாம் இல்லைய்யா!''

''பின்னே?''

''அமெரிக்கா உலக போலீஸ்யா. அதோட ஜனநாயக நாடுய்யா. புஷ்ஷோட ஒரே மேடையிலே மைக்கு முன்னே நின்னு ஒண்டிக்கு ஒண்டியா விவாதம் பண் ணணும்யா. உலகம் பூரா அந்த நிகழ்ச்சியைப் பாக்கும்யா.''

ஸ்கட் மிஸைலால் தாக்கப்பட்டவன் போல ஒசாமா பீதி அடைகிறான்.

''எ-எ-என்னது? புஷ்ஷோட விவா தமா?''

''ஆமாய்யா.''

''அம்மா தாயே, ஆளை விடும்மா. நான் தீவிரவாதிதான். ஆனா தீவிர-வாதி இல்லே. அந்தாளுக்கு இணையா எக்குத்தப்பா என் னாலே பேசி தமாஷ் பண்ண முடியாது. கட்டாயம் தோத்துடுவேன்... 'ஈராக் சண்டையிலே ரெண்டு கையும் போன ஒவ்வொரு அமெரிக்க வீரரையும் சந்திச்சு, அவரோட கையை நான் ஆறுதலா குலுக்கப் போறேன்'னு ஒரு தாட்டி புஷ் சொன்னாராம்.

என்னால இந்த ரேஞ்சுக்குப் பேச முடியாதும்மா. நான் குடுத்த வரம் வாபஸ். வேணா பிராயச்சித்தமா நேரா ஓடிப்போய் வெள்ளை மாளிகை கேட்டிலே சரண் அடைஞ்சிடறேன். ஆளை விடு, தாயி!'' ●



குகை மா.புகழேந்தி

மனத்தைப் பிசைகிற
ஓர் இனிய சொல்லைப்போல
நீ எவ்வளவு அழகாக இருக்கிறாய்

நீ வர வேண்டுமென்கிற பரிபூரண
நம்பிக்கையில்
திறந்து வைக்கப்பட்டவைதானோ
எல்லா திசைகளுமே?

உனது சுவடுகளிலிருந்து
ஊற்றெடுக்கிற இப்பயணத்தில்
எதிர்ப்படுகிற யாவருக்குமே
எப்படித்தான் வாய்த்ததோ
இப்படியொரு மென்மை

இன்று உன்னுடல் போர்த்திய
வண்ணங்களை
தம்மில் கொண்டுள்ள உயிர்களும்
உயிரற்றதுகளும்
முன் நிறுத்துகிற கர்வத்தை
இவ்வுலகால் தாங்கிக்கொள்ள
இயலுமென்றும் தோன்றவில்லை

எல்லோருமே
ஒரே சமயத்தில் மரணத்தை விரும்புகிற
பெருஞ்சுவையுடைய யாரோ
ஒருத்தியின் புன்னகை தரித்த
அந்த ஒருத்தியும் நீயேதானென்றும்
இப்போதுதான் உணர்ந்துகொண்டேன் நான்
நீயோ பார்த்தவுடன்
மறுப்பேதுமின்றி
புன்னகைத்தும் விட்டாய் வேறு!



# யாரோ ஒருத்தியின் புன்னகை!




"டேய், உன் மனைவியைக் கண்டிச்சு வைடா. என்னை வீட்டை விட்டு அனுப்பிட்டுத்தான் மறுவேலைன்னு சபதம் எல்லாம் போடறா."

"ஐயோ அம்மா... இதுக்குத்தான் உன்னை ஓயாம சீரியல் பார்க்காதேன்னு சொன்னேன். உனக்கு என்னவோ ஆயிடுச்சு. எனக்கு இன்னும் கல்யாணமே ஆகலை."

- சாயம் வெ.ராஜாராமன்





# ராத்திரி நேரத்து செங்கல்!



"அரசே! இடைத்தேர்தல் முடிஞ்சு, முடிவும் வந்தாச்சே! போருக்குக் கிளம்பலாமா?"

"கொஞ்சம் பொறுங்கள், தளபதியாரே! ஜனாதிபதி தேர்தலும் முடியட்டும்!"

- சுஹைல் ரஹ்மான்

"உங்க பையன் பரீட்சைல ஃபெயிலானதுக்கு எதுக்கு சார் என்னை அடிக்கறீங்க?"

"உன்னைப் பார்த்துக் காப்பியடிச்சதா அவன் சொல்றானே!"

- அம்பை தேவா






- லீலாஜி



''ராத்திரி நேரத்தில் அவர் வீட்டு முன்னாடி முழு செங்கல்லா வந்து விழுது...''

''ரொம்ப பயந்துட்டாரா?''

''இல்ல... ஒரு லோடு கல்லா இறக்கிடச் சொல்றார்!''

- பம்மல் நாகராஜன்



''ப்ளீஸ் சார்... எனக்கு முட்டை போடுறதுக்கு பதிலா ஒரு மார்க்காவது போடுங்க சார்.''

''ஏண்டா?''

''நான் சுத்த சைவம் சார்!''

- எல்.மூர்த்தி



''போர் என்றதுமே மன்னர் முகத்துலே ஒரு களை வந்துருமாமே...!''

''ஆமா... சவக்களை...''

- தஞ்சை தாமு

# உற்சாக டானிக்!




**உனக்காகவே ஒரு ரகசியம், சத்குரு ஜக்கி வாசுதேவ் - எழுத்தாக்கம்: சுபா, விகடன் பிரசுரம், 757, அண்ணாசாலை, சென்னை - 2, விலை ரூ. 105.**

நல்ல கட்டமைப்புடன் வந்துள்ள கருத்தாழமிக்க புத்தகம். வாழ்க்கைக்குத் தேவையான நல்ல விஷயங்களை எளிய தமிழில், இலகுவான உதாரணங்களுடன் ஜக்கி விளக்கும்போது படித்துக் கொண்டே இருக்கலாம்போல் தோன்றுகிறது. இடையிடையே வண்ணப் புகைப்படங்களுடனான லே அவுட், அழகுணர்வின் அடையாளம். உள்ளத்துக்கு உற்சாக டானிக்!



## புக் பேங்க்









**ஏ.ஏ.ஹெச்.கே.கோரி சிறுகதைகள், இருவாட்சி வெளியீடு, 41, கல்யாண சுந்தரம் தெரு, பெரம்பூர், சென்னை - 11, விலை ரூ 120.00**

சிறுகதை எழுத்தாளர்களில் முக்கியமானவர் கோரி. பல்வேறு ரசம் கொண்ட சிறுகதைகள் இத்தொகுப்பில் நம் வாசிப்பனுபவத்துக்கு இனிமை சேர்க்கின்றன. சரளமான நடை கதைகளுக்கு விறுவிறுப்பு சேர்க்கிறது. ஒரே மூச்சில் படித்து விடலாம் - அயர்ச்சி இல்லாமல்.

**கலைஞர் காவியம், கவிஞர் வாலி, குமரன் பதிப்பகம், 19, கண்ணதாசன் சாலை, தி.நகர், சென்னை - 17, விலை ரூ 150.**

கலைஞரைத் தமது கவிதைகளால் தாலாட்டியிருக்கிறார் வாலி. மரபுக் கவிதைகளால் மயக்கும் அதே சமயத்தில், இவ்வளவு புகழ்ச்சி தேவையா என்றும் யோசிக்க வைக்கிறார். 'சோ'வின் அணிந்துரை, கலைஞர் பற்றிய இன்னொரு பரிமாணத்தை நமக்குக் காட்டுகிறது. ஓவியங்களும் புகைப்படங்களும் புத்தகத்துக்கு வலு சேர்க்கின்றன.

**எழுத்துக் கலைஞன் கந்தர்வன், தொகுப்பு: மு.முருகேஷ், அகநி வெளியீடு, 3, பழைய பள்ளிக்கூட வீதி, அம்மையப்பட்டு, வந்தவாசி - 604 408, விலை ரூ.70**

காலஞ்சென்ற எழுத்தாளர் கந்தர்வனின் கடிதங்கள், முன்னுரைகள், அணிந்துரைகள், நேர்காணல்கள், கட்டுரைகள் யாவும் அழகுற தொகுக்கப் பெற்றுள்ளன. சில கடிதங்களும் கவிதைகளும் நெஞ்சைப் பிசைந்து, கந்தர்வன் இல்லாத வெறுமையில் நம்மைத் தகிக்க விடுகின்றன.

**- ஸ்ரீதளா**



**'சக்கரைக்கட்டி'** - பாக்யராஜின் மகன் சாந்தனு அறிமுகமாகும் படம். மிகுந்த பொருட்செலவில் தயாராகி வரும் இப் படத்தை இயக்குபவரும் ஓர் அறிமுகமே. கலாபிரபு... ப்ளஸ் டூ மாணவன்போல் இருக்கிறார் - இந்த இருபத்தைந்து வயது இளைஞர்... கலைப்புலி தாணுவின் மகன்.

''நீங்கதான் டைரக்டரா?'' என்று நம்ப முடியாமல் கேட்டால்,

''பலரும் இப்படித்தான் கேக்கறாங்க. வயசு சின்னதுன்னாலும் தெளிவான படம் கொடுப்பேன்னு நம்பிக்கையிருக்குங்க'' என்று சிரிக்கிறார்.

''யார்கிட்ட உதவி இயக்குநரா இருந்தீங்க, மணி...'' என்று நாம் முடிக்கும் முன்பே பாய்ந்து வருகிறது பதில்.

''யார்கிட்டயும் இல்ல; இருக்க முடிய லைங்கறதுதான் உண்மை. டைரக்டர் சபா சார்கிட்ட போனேன். தயாரிப்பாளர் மகன்ங்கறதால ஸ்டூல் எடுத்துப் போட்டு உட்கார வைக்க மரியாதை பண்ணாங்க. நொந்துபோய் வந்துட்டேன். அதுக்காக எதுவும் தெரியாம சினிமாவுக்கு வந்துடல. ஒவ்வொரு நுணுக்கத்தையும் எனக்குத் தெரிஞ்ச சினிமா ஆட்கள் கூட இருந்து அணு அணுவா கத்துக்கிட்டேன்.''

''உங்க அப்பா புரொட்யூசர்ங்கறதால சுலபமா வாய்ப்பு வாங்கிட்டீங்க போல...''

''அதுதான் கிடையாது. 'உன்னைத் தகுதிப்படுத்திக்கிட்டாத்தான் வாய்ப்பு'ன்னு அப்பா தெளிவா சொல்லிட்டார். என்னை நிரூபிக்க பல வருஷங்கள் எடுத்துக்கிட்டேன். சேயின் பசி, sorry to say, Dont watch others-னு மூணு குறும் படங்கள் பண்ணினேன். எல்லாத்தையும் போட்டுக்காட்டி என் ஆர்வத்தை எடுத்துச் சொல்லி,என்னை முழுசா புரிய வச்ச பிறகுதான் அப்பா ஒப்புக்கிட்டார். சுலபமா கிடைச்சதில்ல இந்த இயக்குநர் பொறுப்பு.''

''சரி, ஏன் சாந்தனுவ செலக்ட் பண்ணீங்க சக்கரைக்கட்டிக்கு?''

''மொதல்ல என் கதைக்குப் புதுமுகம் தான்னு முடிவு பண்ணிட்டேன். பழைய முகத்தைப் போட்டு இன்னொரு சாயல் வர்றதை நான் விரும்பல. பலபேர்கிட்ட நல்ல ஆள் இருந்தா சொல்லுங்கன்னு

## "எந்த ஒரு படத்துக்கும் பிரமாண்டம் தேவை இல்ல...

# சாந்தனு சாதாரண ஆள் இல்லை!



சொல்லி வச்சேன். என் ஃப்ரெண்ட் ஒருத்தன் ரெகமண்ட் பண்ணான் சாந்தனுவ. ஒரு காஃபி ஷாப்ல மீட் பண்ணினோம். உள்ள வந்தவரு, நேருக்கு நேர் என் கண்ணைப் பார்த்து கம்மா ஸ்டைலா உட்கார்ந்தார் பாருங்க... அந்த நிமிஷமே முடிவு பண்ணிட்டேன்... இவர்தான் என் ஹீரோன்னு. பார்த்துக்கிட்டே இருங்க.... எப்படி வரப்போறாருன்னு... அவர் சாதாரண ஆள் இல்ல...''

''புதுப் பசங்க, புது ஸ்கிரிப்ட்... ஏ.ஆர்.ரஹ்மான் எப்படி ஒப்புக்கிட்டார் மியூசிக் பண்ண?''

''என் கதைதாங்க காரணம். அவர் என்மேல வச்ச நம்பிக்கைய நான் நிச்சயம் காப்பாத்துவேன். பிரமாதமா பாட்டுக்கள் தந்திருக்கார். ஆடியோ ரிலீஸானதும் கலக்கப் போகுது பாருங்க.''

''இளவயது இயக்குநரான உங்களால் உங்களைவிட மூத்த டெக்னீஷியன்களிடம் ஈஸியா பணியாற்ற முடியுதா?''

''ஏன் முடியாது? எனக்கு என்ன தேவையோ அதைத் தெளிவாகச் சொல்லிடுறேன். எனக்குத் தரவேண்டியதைத் தந்துடுறாங்க. பரஸ்பரம் புரிதலும் விட்டுக் கொடுத்தலும் இருந்தா போதும். வயசு ஒரு காரணமா எந்த விஷயத்துக்கும் இருக்காது.''

''அப்பா பிரமாண்ட தயாரிப்பாளர். இஷ்டத்துக்கு புகுந்து விளையாடுறீங்களா?''

''சான்ஸே இல்ல. என் கதைக்கு என்ன தேவையோ அதுக்கான செலவு மட்டும்தான் பண்றேன். அப்பாவே பாடல்களுக்கு ஃபாரின் வேணாகூட போய் ஷூட் பண்ணச் சொன்னார். நான் மறுத்துட்டேன். கதை கெட்டுடும். எந்த ஒரு படத்துக்கும் பிரமாண்டம் தேவை இல்ல... கதை பிரமாண்டமா இருந்தா போதும்.''

''படம் ஏன் இவ்ளோ தாமதமாகுது?''

''பார்த்துப் பார்த்துப் பண்றோம். ஒரு சின்ன விஷயத்தைக்கூட தப்பா சொல்லிடக் கூடாது பாருங்க... என்னதான் அப்பாவே வாய்ப்புக் கொடுத்திருந்தாலும்... என்னை நான் நிரூபிச்சாகணுமே!''- உறுதியாக வெளிப்படுகிறது புகைப்படத்துக்கே மறுத்துவிட்ட பிரபுவின் குரல்.

– மனஸ்வினி

## கதை பிரமாண்டமா இருந்தா போதும்...!''

அடுத்த இதழ்...

நீங்கள் ஆவலே

# ஆனந்(



இதயத்தின் எல்லா பச்

# பார்த்திப

அமரர் கல்கி எழுதும் சரி

ஆச்சர்யம்



ஜகஜ்ஜால ஜோடி

சீக்ரெட் ஆஃப் சிறுநீரகம்

A to Z அலசுகிறார்...

டாக்டர் பி.ரவிச்சந்திரன்

அனுபவம்

## கிளைச்சாலை

சினிமாவின் பின்னணிக் கலைஞர்கள் இங்கே முன்னணிக்கு வருகிறார்கள்!



இவற்றுடன், அமரர் கல்கி நினைவுச் சிறுகதைப் பே

ாடு எதிர்பார்த்த

# ு மலர்!

கங்களையும் தொடும்

# ன் கனவு

ித்திரத் தொடர் ஆரம்பம்...



அதிர்ச்சி



## சி.ஐ.டி.விஷ்வா!

படுதலம் சுகுமாரன்

எழுதும் பரபரப்பு

படத்தொடர்!

பரவசம்

## குருக்ஷேத்ரம்

மகாபாரத மாண்பை விளக்கும்

அருண் சரண்யாவின்

ஆன்மிகப் பயணத் தொடர்!



ட்டியில் ரூ.10,000 பரிசு பெறும் முதல் பரிசுக் கதை!




# உங்களிடம் நல்ல குரல் வளம் இருக்கா?

**நா**ன்கு இளைஞர்கள் ஒன்று கூடினாலே ஒரே பாட்டும் கூத்துமாய் இருக்கும். பாட்டுப் பாடுபவர்களே ஒன்று சேர்ந்தால்... தேவன், கபித்ரா, மதுமிதா, நரேஷ் அய்யர், கிருஷ், ராகுல் நம்பியார், மஹதி, ரஞ்சித் கூட்டணியின் இசை மழையில் ஜூலை எட்டாம் தேதி சென்னை மியூசிக் அகாடமி கொண்டாட்டத்தில் இருந்தது.

இசை வலைத்தளமான hummaa.com சார்பில் நடத்தப்பட்ட இந்த விழாவின் நோக்கம், புது இசைக் கலைஞர்களை உருவாக்குவது.

''நல்ல குரல் வளம், திறமை இருக்கறவங்க, இசைக் கருவி வாசிக்கறவங்க, இந்தியாவின் எந்த மூலைல இருந்தாலும் வெளிக்கொண்டு வர்றதுதான் எங்க hummaa.com-ன் நோக்கம். அதோட ஒரு பகுதியாத்தான் இந்தத் தலைமுறை பாடகர்களை சென்னைல மேடையேத்தி இருக்கோம்'' என்கிறார் hummaa.com நிறுவனர்களில் ஒருவரான விஜய். இந்த இணையதளத்தின் சார்பாக மூன்று மாதத்துக்கு ஓர் இசை ஆல்பம் வெளியிடும் முயற்சியில் இருக்கிறார்கள். 'செப்பன பிரேமா' என்கிற தெலுங்கு ஆல்பம் தேவன், அனிதா குரல்களில் சமீபத்தில் வெளிவந்திருக்கிறது.

''செப்பன பிரேமா ஆல்பத்துக்கு இசை அமைத்தது எல்லாமே புதுமுகக் கலைஞர்கள்தான். அடுத்ததா, பாரதியார் பாடல்களை ஃப்யூஷன் இசைல பாடியிருக்கோம். வருகிற செப்டெம்பர் மாதம் பாரதியார் பிறந்த நாள்ல வெளியிடப் போறோம்'' என்று தேவன் முழங்க,

''தமிழ், தெலுங்கு, குஜராத்தின்னு எல்லா இந்திய மொழிப் பாடல்களையும் இந்த வெப்சைட்ல கேட்கலாம். நீங்க உங்களுக்குள்ளே முணுமுணுக்கற பாடல்களை, கொஞ்சம் சத்தமா பாடி இந்த வெப்சைட்ல 'அப்லோட்' பண்ணினா, உலகம் முழுக்க உள்ள இசைப் பிரியர்கள் உங்க குரலைக் கேட்பாங்க'' என்கிறார் நரேஷ் அய்யர்.

''ஐந்து லட்சத்துக்கும் மேற்பட்ட பாடல்களுக்குச் சட்டரீதியான அங்கீகாரம் இருக்கறதுனால, 'டவுன்லோட்' பண்றவங்களுக்கு உதவியா இருக்கு. நாங்க எப்பவும் காத்துட்டிருக்கறது நல்ல குரலும், திறமையும் உள்ள இசைக் கலைஞர்களுக்குத்தான். அடுத்த முறை நடக்கற எங்க மேடை நிகழ்ச்சிகள்ல நிறைய புது இசைக் கலைஞர்கள் பாடணும். அதுதான் எங்களோட வெற்றி!'' என்கிறார் விஜய்.

– ஜா.தீபா





✱ ஹம்மா டாட் காம் நிறுவனர்கள் விஜய், மன்தீப், விஜயலக்ஷ்மி...

# அமரர் கல்கி



# ராஜாஜியின் மிகச் சிறந்த யோசனை!

**வா**ழ்க்கையிலே சந்தோஷமாக இருப்பது தான் கல்விப் பயிற்சியின் தலைசிறந்த நோக்க மாயிருக்க வேண்டுமென்றும், இதற்காக எல்லாப் பிள்ளைகளுக்கும் சங்கீதம், நடனம் போன்ற ஆனந்தக் கலைகளைக் கற்பிக்க வேண்டும் என் றும் ராஜாஜி கூறியது மிக முக்கியமான விஷயம். ஆனால், பம்பாயில் ராஜாஜி கூறிய யோசனைகளில் எல்லாம் மிகச் சிறந்தது அவர் முடிவுரைப் பிரசங் கத்தில் கூறியதேயாகும். யுனிவர்ஸிடியின் சட்ட திட் டங்களும் சர்க்கார் கட்டுப்பாடுகளும் இல்லாமல், நாட்டிலேயுள்ள சிறந்த அறிவாளிகளுக்கு அவர் களுடைய இஷ்டம் போல் கல்வி முறையில் பரிசோத னைகள் செய்வதற்குச் சுதந்திரம் அளிக்க வேண்டும் என்று ராஜாஜி கூறியதை நிறைவேற்றினால், அதைக் காட்டிலும் நாட்டுக்கு நன்மை பயப் பது வேறொன்றும் கிடையாது. உதாரண மாக, அறிஞர் ஒருவர் குழந்தைகளுக்குப் பத்து வயது வரையில் எழுத்து கற்பிக்கா மலும் புத்தகம் படிக்கச் சொல்லாமலும் வாய் மொழியாகவோ, பொருள்களைக் காட்டியோ, கைத் தொழில்கள் மூலமாகவோ கல்வி கற்பித்துப் பரி சோதனை செய்ய விரும்பினால், அதற்கு வேண்டிய வசதிகளைச் செய்து கொடுக்க வேண்டும். உலகப் பிரசித்தி பெற்ற மோண்டிசாரி அம்மை முதலியவர்கள் இம்மாதிரி சோதனைகளைச் செய்துதான் மனித குலத்துக்கே பரமோபகாரம் செய்திருக்கிறார்கள்.

சுருங்கச் சொன்னால், ராஜாஜியின் மேற்கண்ட யோசனையானது கலை மகளின் கைவிலங்கை யும், கால் தளையையும் வெட்டி, அத் தேவிக்கு விடுதலை அளிக்கும் யோசனையாகும்.

அத்தகைய விடுதலை இந்நாட்டில் கலை மகளுக் குச் சீக்கிரமே சித்தியாகும் என்று எதிர்பார்ப்போமாக.

அந்த ஆனந்தகரமான சம்பவம் நடக்கும்போது இந்தப் புண்ணிய பூமியில் கலைமகளும், திருமகளும் அத்தியந்த சிநேகபாவத்துடன் கூடிக் குலாவுவார்கள் என்பதில் ஐயமில்லை.

**- கல்கி கட்டுரைகள் 2-லிருந்து**

**மணிவாசகர் பதிப்பகம்...**



# நேர்மையின்

"நிறுத்துப்பா! இங்கேதான் இறங்கணும்! ஆட்டோவை நிறுத்து!"

கீழே இறங்கிய பயணிகள் இருவரும் பணத்தை எண்ணிக் கொடுத்துவிட்டு "தேங்க்ஸ் தம்பி!" என்று சொல்லிவிட்டுக் கிளம்பினார்கள். பணத்தைப் பையில் போட்டுக்கொண்டு வண்டியைக் கிளப்பிப்போய் விட்டான் செந்தில். சற்று தூரம் சென்ற பிறகுதான் கவனித்தான், பயணித்தவர்கள், இருக்கையில் பார்சல் போன்ற ஒரு பொட்டலத்தை மறந்துவிட்டுப் போயிருந்ததை.

சட்டென்று வண்டியைத் திருப்பி, அவர்களை இறக்கிவிட்ட இடத்துக்கே வந்து தேடினான். அவர்கள் எங்கே போனார்கள் என்று தெரியவில்லை. பார்சலை கவனித்தான்.

அனுப்பப்பட வேண்டிய முகவரி எழுதி ஒட்டப்பட்டிருக்க, கீழே அனுப்புபவரின் முகவரியும் இருந்தது.

இப்போது செந்தில் வழக்கமாகப் போக வேண்டிய இரண்டு சவாரிகள் இருந்தன. ஒரு குழந்தையைப் பள்ளிக்கூடத்தில் கொண்டுபோய் விட வேண்டும். அடுத்ததாக, வயதான ஒருவரை டாக்டர் வீட்டுக்கு அழைத்துக்கொண்டு போய், இன்ஜெக்ஷன் போட்டுக் கொண்டவுடன், அவர் வீட்டில் திரும்பக் கொண்டுபோய் விட வேண்டும். இரண்டுமே மிக அவசரம். இந்த இரண்டு வேலைகளையும் முடித்துக்கொண்டு பார்சலை உரியவரிடம் சேர்த்து விடலாம் என்று முடிவு செய்த செந்தில், வண்டியைக் கிளப்பினான்.

"ஐயா!"

ஹாலில் காலையில் செந்திலின் வண்டியில் பயணம் செய்த இருவரும் அமர்ந்திருந்தார்கள்.

"அடடே! ஆட்டோ தம்பியா? வாங்க... வாங்க..." என்று வரவேற்றார் ஒருவர்.

"கொஞ்சம் தாமதமாயிடிச்சு. மன்னிச்சுக்குங்க! இந்தாங்க நீங்க வண்டியில மறந்துபோன பார்சல்!"

அவர்கள் இருவரும் ஒருவரை ஒருவர் பார்த்துக் கொண்டார்கள்.

"அப்ப நான் வரேங்க!"

"கொஞ்சம் இரு தம்பி!"

"என்னங்க... பொருள் சரியா இருக்கான்னு சந்தேகமா?"

"அவசரப்படாதேப்பா... எனக்கும், இதோ இருக்காரே என்னோட நண்பர் இவருக்கும் நேத்து ஒரு விவாதம். உலகத்துல நேர்மை மறைஞ்சு போச்சு - சந்தர்ப்பம் கிடைச்சா யாரும் யாரையும் ஏமாத்துவாங்கன்னாரு இவர்! நான் சொன்னேன், நேர்மையா இருக்கறவங்க இன்னைக்கும் இருக்கத்தான் செய்யறாங்க. ஒட்டுமொத்தமா மனித குலமே மோசம்னு சொல்றது சரியில்லன்னு. யார் சொல்றது சரின்னு முடிவு கட்ட ஒரு சின்ன டெஸ்ட்

மெலட்டூர் விஸ்வநாதன்

# விலை!



வைக்கிறதுன்னு முடிவு செஞ்சோம். இந்த பார்சலை ஒரு ஆட்டோவுல மறந்த மாதிரி வச்சிட்டு வந்துடறது! ஆட்டோக்காரர் என்ன செய்யறார்... பார்சலைக் கொண்டு வந்து கொடுக்கறாரா இல்ல, தானே வச்சுக்கறாரான்னு பார்க்கறதுதான் டெஸ்ட்!''

சட்டென்று சூடாகி விட்டான் செந்தில்.

''ஏன் இப்படி செஞ் சீங்க? நேர்மை உங் களுக்கு விளையாட் டுப் பொருளா யிடுச்சா?''

''எதுக்குத் தம்பி கோபப் படற? நாட்டுல நல்லவங்களும் இருக்காங்கன்னு நாங்க தெரிஞ் சுக்கிட்டது நல்ல விஷ யம்தானே!''

''உங்களுக்கு வேணா அது நல்ல விஷயமா இருக்கலாம். எனக்கு என் நேர்மையை யார் சந்தேகப்பட்டாலும் பிடிக்காது.''

''மன்னிச்சிடுப்பா. இந்தா ஐந்நூறு ரூபா... உன் நேர்மைக்குப் பரிசா வெச் சுக்க...''

'' இது அதைவிட கொடுமை. நேர்மைய சந்தேகப்படறதே தப்பு... நீங்க என்னடான்னா அதுக்கு விலையே நிர்ணயம் பண்ணிட்டீங்க... உங்ககிட்ட பேசறதையே பாவமா நினைக்கறேன்... நான் வரேங்க...''

செந்தில் விருட்டென்று புறப்பட, அவர்கள் இருவரும் தலைகுனிந்து நின்றனர். ○

> "இந்தா, இந்த ஐந்நூறு ரூபாய உன் நேர்மைக்குப் பரிசா வெச்சுக்க!"

# பி.ஜே.பி.யுடன் அணி சேரும் தமிழகக் கட்சிகள்!



''ஹலோ மிஸ்டர் ராமானுஜம்'' என்றால், தமிழக பாரதிய ஜனதா கட்சியின் தலைவரான இல.கணேசனின் கண்களில் திடீர் மின்னல்! அவசர நிலை கால கட்டத்தில் கிட்டத்தட்ட இருபது மாதங்கள், 'ராமானுஜம்' என்ற திருநாமத்துடன் மாறுவேடங்களில் தலை மறைவு வாழ்க்கை நடத்தி, காவல் துறையின் கண்களில் கண்ணீர்ப் புகை வீசியவர் இல.கணேசன்.

''எனக்கு ஆறு சகோதரர்கள். நான் ஐந்தாவது மகன். என் மூத்த சகோதரர்கள் எல்லாம் ஆர்.எஸ்.எஸ். இயக்கத்தில் இருந்தவர்கள்தான். ஆனால் அவர்கள் பகுதி நேரங்களில் பணிபுரிந்து கொண்டிருந்தார்கள். நான் முழு நேர ஊழியராகி விட்டேன். தேச பக்தி, தெய்வ பக்தி, தனி மனித ஒழுக்கம் என்று எல்லாவற்றையும் எனக்குக் கற்றுத் தந்தது ஆர்.எஸ்.எஸ். இயக்கம்.''-



காலை நடைப்பயிற்சியின்போது பேசிக் கொண்டே வருபவர், பாரதியின் 'பாரத மாதா திருப் பள்ளியெழுச்சி'யை மெலிதாகப் பாடத் துவங்குகிறார். அப்படியே பாரத மாதா பக்தி ஸ்தோத்திரம், ஆர்.எஸ்.எஸ். இயக்கத்தினர் சொல்லும் ஐக்கிய மந்திரத்துக்குத் தாவுகிறார்.

அடுத்து எட்டு ஸ்லோகங்கள் கொண்ட கேச வாஷ்டகம் என்ற ஆர்.எஸ்.எஸ். நிறுவனர் குறித்த பாட்டும், வந்தே மாதரமும். தொடர்ந்து சிவபுராணத்திலிருந்து ஸ்தோத்திரங்கள்! தமது வீடு இருக்கும் மேற்கு மாம்பலம், போஸ்டல் காலனியில் துவங்கி, அசோக்பில்லர் வரை நடை சென்று வர 45 நிமிடங்களாகி விடுகின்றன. மழை மற்றும் வாக்கிங் போக முடியாத நாட்களில் இருக்கவே இருக்கிறது வீட்டில் டிரெட்மில்.

நடைப் பயிற்சி முடித்து வந்தவுடன் காஃபி. அடுத்த அரை மணி நேரம் பத்திரிகைகள் அவரது நேரத்தை எடுத்துக் கொள்கின்றன. படிக்கும்போதே முக்கியமான செய்திகளை காகிதத்தில் குறித்துக் கொள்கிறார். அலுவலகத்தில் செயலாளர் இருந்தாலும் அன்றாட நிகழ்ச்சிகளைத் தாமே கைப்பட எழுதி வைத்துக் கொள்கிறார்.

குளித்து முடித்ததும் நெற்றியில்

## இல.கணேசன் இனிப்புச் செய்தி!



# "2009 பாராளுமன்றத் தேர்தலில் உங்களுக்குப் பல ஆச்சர்யங்கள் காத்திருக்கின்றன!"

பட்டையாகத் திருநீறு, பட்டுக்கரை வேட்டி கட்டிக்கொண்டு காயத்ரி ஜபம் செய்ய அமர்கிறார். தொடர்ந்து பிராணா யாமப் பயிற்சிகள்.

"இந்த நடைமுறை வியாழன் மற்றும் ஞாயிற்றுக்கிழமைகளில் கொஞ்சம் மாறு படும். அந்த தினங்களில் காலையில் ஆர்.எஸ்.எஸ். பயிற்சிக்குச் சென்றுவிடு வேன்." என்கிறவர், தம்முடைய 'காக்கும் தெய்வங்கள்' என்றவாறு அண்ணன், அண்ணியை அறிமுகப்படுத்துகிறார். அதற் குள் அதே பகுதியில் குடியிருக்கும் ஒரு பெரியவர், வங்கியில் பணிபுரியும் தம் மகனுக்கு மாற்றல் வாங்கித் தரும் பொருட்டு இல.கணேசனைச் சந்தித்து கோரிக்கை வைக்கிறார். 'விவரங்கள் கொடுங்க, பார்க்கிறேன்' என்று ஆறுதலாக அவருக்குப் பதில் சொல்லி அனுப்புகிறார்.

இல.கணேசன் பேச்சில் தனிநபர் தாக்குதல் இருக் காது. அரசியல் எதிரி களின் கொள்கைகள், செயல் முறைகளை மட்டுமே விமர்சிப் பார். கேட்பவர்களைக் கட்டிப் போடும் பேச்சாளர். "இதற்குக் காரணம் நான் பேசு வது சத்யம் மட்டும்தான்" என் கிறார். ஆர்.எஸ்.எஸ். இயக்கத் தில் உள்ள பலர் திருமணம் செய்து கொண்டு வாழும் நிலையில், இல.கணே சன் மட்டும் குடும்ப வாழ்க்கையைத் தவிர்த்து பிரம்மச்சாரியாகவே தொடர் கிறார். "திருமணம் செய்து கொள்ளக் கூடாது என்று இயக்கம் சொல்லவில்லை. ஆனால், இயக்கப் பணிகளில் கூடுதல் கவ னம் செலுத்த முடியாது என்பதால் திரு மணத்தைத் தவிர்த்து விட்டேன்" என் கிறார். கொஞ்சம் சர்க்கரைக் குறைபாடு இருந்தாலும், சாப்பாட்டில் பெரிய கட்டுப் பாடுகள் இல்லை.

"தேசிய அளவில் காங்கிரஸ் - பா.ஜ.க. கட்சிகள் மட்டுமே முக்கிய பங்கு வகிக் கும். மற்ற மாநிலக் கட்சிகள் இந்தக் கட்சிகளுடன் கூட்டு வைக்கும் நிலை தான். மூன்றாவது அணி தோன்ற சாத்தியமேயில்லை. 2009 பாராளுமன்றத் தேர்தலில் நீங்கள் ஆச்சரியப்படும் படியாகப் பல தமிழகக் கட்சிகள் எங்களுடன் அணி சேரும்" என்று உறுதியாகச் சொல்லிக் கொண்டே புறப்பட ஆரம்பிக்கிறார் இல. கணேசன்.



- ஸ்ரீநி

படங்கள்: ராஜன்

# அரும்பு மீசைக்காரா...

ரெண்டு வாரங்களுக்கு முன்னாடி பெண் கவிஞர்களைக் கவிதை எழுதச் சொல்லியிருந்தேன். 'கவிதைக்குப் பொய் அழகு; உங்கள் காதலனைப் பொய்யாவாவது வர்ணிக்க எழுதுங்க'ன்னு சொன்னேன். நான் சொன்ன 'பொய்' வார்த்தையைச் சாதகமாக்கிட்டு சில ஆண்



கவிஞர்களே பெண் பெயர்ல எழுதியிருக்காங்க. ஏங்க இப்படி? இந்த மாதிரி 'தன் இனப் புகழ்ச்சி' கூடாதுங்க. ச்சி! ச்சி! ஷேம்! ஷேம்! தேடிப் பிடிச்சு சில கவிதைகளை இங்கே கொடுத்திருக்கேன். இவங்களாவது நிஜமான பெண் கவிஞர்களா இருப்பாங்கன்னு நம்பறேன் (பால் மாறிய ஒருவரின் கவிதையையும் கொடுத்திருக்கேன். அதை முதல்ல படிச்சுடுங்க.).

நேரில் பார்த்ததில்லை
தொலைபேசியில் பேசியதில்லை
காதல் நந்தவனத்தில்
நடனமாடும் மதனராஜனே
நீயே என் காதலன்!

**- வே.சித்ரா,**
**கும்மிடிப்பூண்டி**

(தனசேகர் சாரே! சௌக்கியமா?)

அரும்பு மீசைக்காரா
காதல் பார்வையால்
விழுங்கியது போதும்
விரல்களால் குறும்பு
செய்தது போதும்
மனைவியாய்க் கரம்பிடிக்க
எப்போது வரம் தருவாய்?

**- பி.அமுதா,**
**தஞ்சாவூர்**

('பிகு' பண்ணினா மீசையைப் புடிச்சு தரதரன்னு இழுத்துட்டுப் போங்க, அம்மணி!)

பொய்யின் பொருள்
விளங்கியது
நீ என்னை அழகி என்றதும்
சிங்க நடை பார்த்ததில்லை
உன்னைப் பார்த்துத்தான்
புரிந்தது அதன் கம்பீரம்

**- எம்.ஜானு,**
**கோவில்பட்டி**

(பதிலுக்கு நீங்க பொய் சொல்றீங்களாக்கும். ஜாடிக்கேத்த மூடிதான்!)



கனவில் கண்ட உன்னை
பகலில் இமைகள் மூடி
பாதுகாத்தும்




ஊடற் பொழுதுகளில்
உன் கனத்த மௌனம்
இதயத்தைக் கிழிக்கிறது!

கோபத்தில் குரலுயர்த்துகையில்
என் மனம் மருளுகிறது!

உன் விழிகளில் மின்னலாய்ப்
பளிச்சிடும் காதலில்
என் ஜீவன் சிரிக்கிறது

கவி. விஜயா ரவி, ஈரோடு

# மதனராஜன்

கண் மை வழியே
வழிந்து மாயமாகிறாய்

- ஜெயந்தி சிவக்குமார்,
ஏற்காடு

(பார்ட்டி சரியான விலாங்கு மீனா இருக்கும் போலிருக்கே... விட்டுடாதீங்க சிஸ்டர்!)

**க**டைசியா உங்களுக்கெல்லாம் ரொம்ப சந்தோஷமான செய்தி!

அடுத்த இதழ் ஆண்டு மலர். நிறைய புதுப் பகுதிகள் வரப் போகுது. வெரைட்டியான விஷயங்கள், ஜொலிக்கும் லே - அவுட், அட்டை டு அட்டை அசத்தப் போறதா எடிட்டோரியல்ல பரபரப்பா பேசிட்டிருந்தாங்க. போதாத குறைக்கு கல்கி சாரோட 'பார்த்திபன் கனவு' மிரட்ட வருது; காதல் பொன்மொழிக் கதைகள் ரசிக்க வருது. அதான் முடிவு பண்ணிட்டேன் - காதல் நந்தவனத்தை கொஞ்சம் தள்ளிப் போடலாம்னு. இந்த இதழோடு இப்போதைக்கு விடைபெறுகிறேன். மறுபடி சந்திப்போம். அதுவரை காதலுடன்...

# ஃபாஸ்ட் ஃபுட்



ன்றைக்கு எல்லோரும் டுவெண்டி டுவெண்டி கிரிக்கெட்டைப் பற்றித்தான் ஓயாது பேசிக் கொண்டிருக்கிறார்கள். சராசரி இந்திய ரசிகனுக்கு இதுவரை இந்த ஆட்டத்தை டீ.வி.யிலோ, நேரிலோ பார்க்கிற அனுபவம் வாய்க்கவில்லை. செப்டெம்பர் மாதம் தென் ஆப்பிரிக்காவில் நடக்கவுள்ள 20:20 உலகக் கோப்பை கிரிக்கெட்டில் அப்படி என்னதான் இருக்கிறது?

பெரிய வித்தியாசமில்லை. ஐந்து நாள் ஆட்டங்கள் சோம்பலை உற்பத்தி செய்கிறது என்று சொல்லி ஒன்டே கிரிக்கெட் ஆரம்பிக்கப்பட்டது. ஆனால், நாளடைவில் இந்த ஜிகினாக்களும் கொட்டாவியை வரவழைத்துவிட்டன. கால்பந்து, ஹாக்கி எல்லாம் ஒருமணி நேரத்துக்குள் முடிகிறது. ஆனால், சூரிய உதயத்தில் ஆரம்பிக்கிற கிரிக்கெட் மட்டும் ஏன் சூரிய அஸ்தமனம் வரைக்கும் ஜவ்வாக இழுத்துக்கொண்டு போக வேண்டும் என்கிற கேள்வி எழுந்தது. ரெடி டு ஈட், ஃபாஸ்ட் ஃபுட், பாக்கெட் நாவல் காலத்தில் முடிவுகளை அறிந்துகொள்ள எல்லோருக்கும் ஓர் அவசரம். முடிவாக யோசித்து யோசித்து ஆளுக்கு இருபது ஓவர்கள் ஆடி வெற்றி தோல்வியை நிர்ணயிக்கும் ஒரு புது வடிவிலான ஆட்டத்தைக் கண்டுபிடித்து விட்டார்கள். அதுதான் டுவெண்டி டுவெண்டி கிரிக்கெட்.

கிரிக்கெட்டின் தாய்நாடான இங்கிலாந்துதான் 20:20-ஐயும் அமலுக்குக் கொண்டு வந்தது. 98-ஆம் வருடம் முதலே ஒன்டே கிரிக்கெட்டின் போக்கை மாற்றிப் பார்க்க வேண்டும் என்கிற பேச்சு எழுந்தது. ஒரு நாள் போட்டிகளில் இருபதாவது ஓவரில் ஆரம்பித்து, சுமார் நாற்பது ஓவர்கள் வரை ஆட்டம் நத்தை மாதிரி நகர்வதால் அதற்கு உடனடி மாற்று ஏற்பாடு யோசிக்கப்பட்டது. கூடவே 2003-ஆம் ஆண்டுவாக்கில் கவுண்டி மேட்சுகளுக்கு மக்



களிடையே மவுசு குறைய ஆரம்பித்தது. மைதானம் நிரம்பாத கிரிக்கெட், என்ன பெரிய கிரிக்கெட்! இங்கிலாந்தில் முதலில் அறிமுகப்படுத்தப்பட்ட 20:20-ன் ஒவ்வொரு மேட்சையும் குறைந்தது ஏழாயிரம் பார்வையாளர்கள் கண்டு ரசித்தார்கள். ஒவ்வொரு பந்து வீசும் போதும் அவர்களுக்குச் சிலிர்ப்பு ஏற்பட்டது. ஆட்ட முடிவில் யாருக்கு வெற்றி என்கிற பதை பதைப்பு அவர்களை மயக்க நிலைக்குத் தள்ளியது.

எலியை விரட்டும் பூனை ஆட்டம்தான் 20:20 கிரிக்கெட். பொதுவாகவே கிரிக்கெட்டில் பந்து வீசுபவர்களுக்கு மரியாதை கிடையாது. கிரிக்கெட் என்பது பேட்ஸ் மேன்களுக்காகவே சிருஷ்டிக்கப்பட்ட ஒரு விளையாட்டு. 20:20 இன்னும் மோசம். ஒவ்வொரு பந்துக்கும் சிக்ஸரும் ஃபோரும் பறக்க வேண்டும் என்கிற எண்ணத்தில் உருவாக்கப்பட்ட ஆட்டம் இது. ஆகவேதான் கிரிக்கெட்டையே கனவாகக் கொண்டுள்ள இளைஞர்கள், அதிலும் குறிப்பாக பௌலர்கள் 20:20 ஆடி கெட்டுப் போகக் கூடாது என்று சீனியர் கிரிக்கெட்டர்கள் அச்சம் கொள்கிறார்கள். அதே சமயம், மட்டையைச் சுழற்றினால் மட்டுமே ரன் மழையைப் பொழியச் செய்ய முடியாது. ஹர்பஜன், முரளீதரன் போன்ற காட்டடி அடிக்கும் பந்து வீச்சாளர்களை ஒப்பனர்களாக அனுப்பி அறுவடை செய்ய நினைத்த அணிகளுக்குத் தோல்வியே மிஞ்சியது.

மக்கள் இரு கை நீட்டி வரவேற்பதால் ஸ்பான்ஸர்கள் மேலே வந்து விழுகிறார்கள். அலென் ஸ்டேன்வோர்டு என்கிற ஒரு பில்லினியர், 23 மில்லியன் டாலர் பணத்தை இரைக்க இப்போதே தயாராகி விட்டார். இந்தியா ஆரம்பத்தில் 20:20ஐ எதிர்த்தே வந்தது. ஆனால் பணப் புழக்கத்தைக் கண்டு மனமிறங்கிவிட்டது.

செப்டெம்பர் 11-ல் ஆரம்பிக்கிற போட்டி 24-ஆம் தேதி வரைக்கும் செல்கிறது. டிக்கெட்டுகள் வாங்க மக்கள் அதிக ஆர்வம் காட்டி வருகிறார்கள். உலகக் கோப்பை முடிந்த பிறகு 20:20க்கு வீரர்களும் ரசிகர்களும் எந்த அளவுக்குப் பழகிப் போயிருக்கிறார்கள் என்கிற விவரம் எல்லாம் தெரிந்துவிடும். ஆனால் ஒன்று, இதுவும் நாளைக்கு போரடித்துப் போய் ஒரே ஓவரில் முடிவைத் தெரிந்து கொள்ளும் அளவுக்கு கிரிக்கெட் சுருங்கிவிட்டாலும் ஆச்சர்யப்படுவதற்கில்லை.

**- ச.ந.கண்ணன்**

# கிரிக்கெட்!



# உறைந்த

**சே**.ஏ.சிவராமகிருஷ்ணன் என போலீஸ் ரெக்கார்டுகளில் பதிவு செய்யப் பட்டிருந்த சிவா, மாடி வராந்தாவின் மடிப்பு நாற்காலியில் அமர்ந்து கீழே வீதியைப் பார்த் தான். மன உளைச்சல் பிராண்டிற்று. எதிர் வீட்டு வாசற்படிக்கு நேரே ஆட்டோ வந்து நின்றதுமே தொடங்கிய உளைச்சல். வாட்சில் மணி பார்த்தான், நாலு. அஜிதா இனிமேல்தான் சச்சிதானந்தனோடு பீச்சுக் குக் கிளம்புவாள். தேவராஜன் நிச்சயம் வீட்டில் இருக்க மாட்டான். வெங்காய மண்டி கல்லாவில் காசு வாங்கிப் போட்டுக் கொண்டிருப்பான். சச்சிதானந்தனை ஆட்டோ டிரைவர்தான் வீட்டுக்குள் நுழைந்து இரண்டு கைகளாலும் அள்ளித் தூக்கி வந்து ஆட்டோவில் சாய்த்து உட்கார வைக்க வேண்டும். அதற்குப் பின்னால்தான் அஜிதா கதவைப் பூட்டிக்கொண்டு வந்து ஆட்டோவில் உட்காருவாள்.

ஆனால், அஜிதா இன்று அப்படி வந்து உட்காரவில்லை. தெருவில் நின்றபடி நிமிர்ந்து மாடியைப் பார்த்தாள். நாற்காலியில் உட்கார்ந்திருக்கும் சிவராமகிருஷ்ணனைப் பார்த்துக் கையாட்டினாள். சுட்டு விரல் பாதி யில் பெருவிரல் ஊன்றி உயர்த்தி, "ஒரு ஹெல்ப்" என்றாள்.

தன்னைத் தான் கேட்கிறாள் என்று புரிந்துகொள்ளவே சிறிது நேரம் ஆயிற்று. "சொல்லுங்க!"

"பீச்சிலேருந்து அப்படியே கோயிலுக் குப் போய்ட்டு வரணும். சச்சிக்குப் பொறந்த நாள். திரும்ப நாழியாயிடும். அதுக்குள்ள அவர் வீட்டுக்கு வந்தா சாவி குடுத்துட்டுப் போறேன். அவர்கிட்டே குடுத்துட முடியுமா?"

"சாவி எங்கிட்டே இருக்கும்னு அவ ருக்குத் தெரியணுமே?" நாற்காலியை விட்டு எழுந்து அவன் கேட்டான்.

"செல்போன்ல சொல்லிட்டேன்" அவள் கண்ணிலும் உதட்டிலும் மரியாதை யும் பிரியமும்.

"ஏழு மணிக்குள்ள வந்துடுவாரா?" சிவா ஏழரை மணிக்கு போலீஸ் ஸ்டேஷனுக்குப் போக வேண்டும். சென் னையை விட்டு வெளியே போய் எந்தச் சதிவேலையிலும் இறங்கி, வெடிகுண்டு வைத்து எதையும் தகர்க்கவில்லை என்று நிரூபிக்கக் கையெழுத்துப் போட வேண்டும். அது அஜிதாவுக்கும் தெரியும்.

"ஏழு மணிக்குள்ள அவர் வரலேன் னாலும் நான் வந்துடுவேன்!"

"அப்ப சரி..." சிவா இறங்கிப் போய் சாவி வாங்கி வந்தான்.

**மூ**ன்று மாதங்களுக்கு முன்னால் பீச்சில் தொடங்கிய உளைச்சல் சிவராம கிருஷ்ணனுடையது. ஜனநடமாட்டம் குறைந்த கடைகோடிப் பகுதியின் படகு மறைவில், இரண்டு மீனவச் சிறுவர்கள் மணலை வாரி ஒரு குழி தோண்டிக் கொண்டிருந்தார்கள். அவர்கள் அருகே அஜிதா நின்று கொண்டிருந்தாள். சச்சி கீழே படகில் சாய்ந்து தன் சூம்பிய கால்களை நீட்டியபடி ஆழமாகிச் செல்லும் குழியை வேடிக்கை பார்த்தான். தூரத்தில் நடந்து சென்ற சிவா, அந்தக் காட்சியால் ஈர்க்கப் பட்டு நின்றான்.

"ரொம்ப நேரம் விட்டுடாதேம்மா!" சச்சி குரலில் கெஞ்சல்.

"ஏன்?" அஜிதா கேட்டாள்.

சச்சி சுட்டு விரல் நீட்டி ஒன்றுக்கு வந்து விடுகிறது என்று குறிப்பாக அறிவித்தான்.

அவள் முகம் மாறியது.

"வந்தா சொல்லு! நான் தூக்கிவிடச் சொல்றேன்."

**வையவன்**

# நேசம்!



தோண்டிய குழியில் சச்சியை அவர்கள் இடுப்பு வரை இறக்கி மணல் மூடிப் புதைத்த பின் அஜிதா நீட்டிய ஐந்து ரூபாயை வாங்கிக்கொண்டு நகர்ந்தனர்.

சிவா அவர்களை நெருங்கினான்.

''அஜிதா?'' என்று நிச்சயப்படுத்திக் கொள்வது போல் கேட்டான்.

அவள் திரும்பி அவனை ஒரு நிமிடம் பார்த்ததுமே அடையாளம் கண்டுகொண்டாள். புருவம் உயர்த்தினாள்.

''சிவராமகிருஷ்ணன்?''

''ஆமாம்.'' அவன் தலையாட்டிவிட்டு இன்னும் சற்று நெருங்கி வந்து கேட்டான்.

''மகனா?''

''ஆமாம். சச்சிதானந்தன். எட்டு வயசு. போலியோ அட்டாக். ஆரம்பத்துல கவனிக்கல.'' அவள் இயல்பாக வளவளவென்று வளர்க்காமல் தகவலாகச் சொன்னாள். அந்த முகத்தில் அனுதாபப்பட்டு என்னை வருத்தப்படுத்திவிடாதே என்ற தீரப் புன்முறுவல்.

''இந்த சிகிச்சை?''

''இயற்கை வைத்தியர் ஒருத்தர் சொன்னார், மூணு வாரமா வந்துண்டிருக்கேன். கால்ல கொஞ்சம் சொரணை அதிகமாயிருக்கு. சொவத்தைப் பிடிச்சு நிக்க முடியறதுங்கறான் சச்சி. இல்ல சச்சி?'' அஜிதா கேட்கவும் சிறுவன் சிரித்தபடியே தலையாட்டினான். அச்சு அசல் அஜிதா. கண்களில் அதே மகர நட்சத்திரச் சுடர்.

''என்ன ஆச்சு அஜிதா?'' அவள் அவனுக்கு உடனே பதில் சொல்லவில்லை. கடலையும் சச்சிதானந்தனையும் அடுத்து சிவாவையும் மாறி மாறிப் பார்த்தாள்.

# "அவங்க வீட்டுக்காரரை மார்க்கெட்ல யாரோ விரோதத்துல கத்தியால குத்

''என்னென்னவோ ஆச்சு. ஆமாம் உனக்கு என்ன ஆச்சு சிவா?'' அவள் அவனுக்கு ஆனதில் அக்கறை காட்டினாள்.

''பேப்பர்ல செய்தி படிச்சியோ?''

அவள் தலையாட்டினாள்.

''வெறுத்துட்டியோ? கொலை... வெடி குண்டு... சதி... அப்படி இப்படின்னு பெரிய கயிறாத் திரிச்சு விட்டிருப்பாங்களே!''

''ஆமாம்... ஆனா வெறுப்படையல.... என்னமோ நடந்திருக்கு. எல்லாருக்கும் நடக்கிறாப்பலன்னு நெனச்சேன். இங்கே என்ன பண்றே?''

''தற்சமயம் ஒரு ரூம் தேடிக்கிட்டிருக் கேன்.''

''சென்னையில்தான் இருக்கியா?''

''இருக்கணும். இருந்தாகணும். கேஸ் முடியற வரைக்கும் டெய்லி போலீஸ் ஸ்டேஷனுக்குப் போய்க் கையெழுத்துப் போடணும். ஜாமீன் நிபந்தனை.''

இருவரும் ஒருவரையொருவர் பார்வை யால் அளந்தனர். நல்லழகனேந்தல் மலை யடிவாரத்துப் பள்ளிக்கூடம்... விடுமுறை விட்டுக் காலியாய் வெறிச்சோடிய விசால மான விளையாட்டு மைதானம்... இலை யுதிர் காலத்தில் காற்றிலே கலகலத்துக் கொண்டு புரண்டு ஓடும் மந்தார இலை கள்... தலை நிமிர்ந்தால் இரவு பகல் என்று நாள் கணக்கில் எரியும் மலைக் காட்டுத் தீ.

'என்னென்ன கனவுகள் உதிர்ந்து எவ்வளவு கனவுகள் எரிந்து விட் டன?'

கடல் காற்று ஓசையிட்ட மௌனத்தில் அவர்கள் கேள்விகள் புதைந்தன.

''மஙீதாவுக்குக் கல்யாணம் ஆனது தெரியும்ல?''

அவன் வருத்தச் சிரிப்புடன் தலை யாட்டினான். இனி சாம்பல் கிளறி என்ன லாபம்? அவன் பார்வை சச்சியின் மீதும் அவளது இளைத்த தோற்றத்திலும் மாறி மாறிப் பதியக் கேட்டான்.

''என்ன ஆச்சு அஜிதா? ஏன்... ஏன்?''

''ஜஸ்ட் என்னல்லாம் ஆகணுமோ அது தான் ஆச்சு. டிம்பக்டு... டிம்பக்டு... பட்டிங்டு... டிம்பக் டிம்பக் பட்டிங்டு... நெவர் மைண்ட் இட் டிம்பக்டு.''

அது நல்லழகனேந்தலில் அவர்களாகப் புனைந்துகொண்ட ரைம்ஸ். என்னவா னாலும் அலட்டிக்கொள்ளக் கூடாது என்ப தைக் குறிக்கிற பரிபாஷை.

''அது இல்ல...'' அவன் வளர்க்க முயன்ற போது அவள் குறுக்கிட்டு, ''சிவா... சுண்டல் சாப்பிடுவோமா? சச்சி பீச்சுக்கு வர்றதே சுண்டல் சாப்பிடத்தான்! இல்ல சச்சி?''

இடுப்பு வரை மணலில் புதையுண்டி ருந்த சச்சிதானந்தன் பளிச்சென்று நட்சத்தி ரம் உதித்ததைப்போல் பல் தெரியச் சிரித் தான்.

சுண்டல் மென்றபடியே அஜிதா, கோயம் பேடு மார்க்கெட் வெங்காய மண்டி தேவ ராஜன் கணவனாகக் கிடைத்ததை எந்தப் பாதிப்புமற்று சாதாரணமாகச் சொன்னாள்.

''நீ ஏன் தீவிரவாதி ஆனே சிவா?''

''நீ ஏன் ஐ.ஏ.எஸ். ஆகாம

## ரீடர்ஸ் கார்னர்!

வெளிநாடுகளால் காப்புரிமை பெறப்பட்ட 'இந்தியப் பழம்பெரும் அறிவுச் சொத்து'களின் பட்டியலில் புதி தாகச் சேர்ந்துள்ளது யோகாசனம்.

ஆம்! யோகாசனத்தின் '200 நிலை களுக்கு' அண்மையில் காப்புரிமைப் பெற்றுள்ளது அமெரிக்கா. அமெரிக்காவுடன் பல்வேறு ஒப்பந்தங்களைச் செய்து கொண்டுள்ளபோதும் மத்திய அரசு இதைக் கண்டித்திருப்பது பாராட்டத்தக்கது.

நம் நாட்டில் 'பழம்பெரும் அறிவுச் சொத்துகள்' வேறென்னென்ன இருக் கின்றன என்று ஆராய்ந்து, அவற்றைக் காப்புரிமை செய்வதற் கென்றே ஒரு சிறப்பு ஆணையத்தை அமைக்க வேண்டும்! செய்வார்களா?

**- இ.பு.ஞானப்பிரகாசம், சென்னை**

## ...ங்க. ராயப்பேட்டை ஆஸ்பத்திரில அட்மிட் ஆயிருக்காரு!''



கல்யாணம் பண்ணிக்கிட்டே அஜிதா?''

''ஒனக்குத் தெரியாதா?''

''என்னது?''

''எங்கப்பா தற்கொலை பண்ணிக்கிட்டது?''

''தற்கொலையா? ஐயையோ... ஏன் எப்படி?''

''கடன் தொல்லை... விவசாயச் செலவுக்கும் வரவுக்கும் நடுவுல வாயப் பொளந்துட்டு நிக்கற பள்ளம். வானம் பார்த்த பூமியில மண்ணைக் கௌறிக் கௌறிப் பாக்கற எந்த விவசாயி சிவா நிம்மதியா சாகறான்?''

''நானும் விவசாயி மகன்தான் அஜிதா. விடிஞ்சுரும் விடிஞ்சுரும்னு மாத்தி மாத்தி ஒட்டுப் போட்டு மாட்டுச் சாணத்தை விடக் கேவலமா மக்கிப்போன விவசாயி மகன். எல்லாத்தையும் வித்துட்டு, பஞ்சம் பொழைக்கப் பட்டணத்துக்கு வந்தவங்களப் பாத்து வெறுத்துப் போச்சு. ஒரே பொய்... பித்தலாட்டம்... ஊழல்... அயோக்கியத்தனம்... ஏன்... ஏன்... ஏன்... அஜிதா? எந்தெந்த அயோக்கியத்தனங்களோடு சமரசம் செஞ்சுக்கிட்டு என்ன எழவுக்கு இப்படி ஒரு மண்ணாங்கட்டி வாழ்க்கை வாழறது?''

அவன் குரல் உயர்ந்தபோது சச்சிதானந்தன் மணல் வீட்டைக் கலைத்தபடியே திரும்பிப் பார்த்தான்.

''என்ன சாதிச்சுட்டே?''

''எதுக்கும் சமரசம் செஞ்சுக்கலேங்கற திருப்தி.''

''போதுமா?''

''போதும் இப்போதைக்கு!''

''சரி சரி... எவ்வளவு நாள் மெட்ராஸ்ல இருப்பே?''

''ஏன்? மனச மாத்தி எனக்கு நல்ல புத்தி உண்டாக்கவா?''

''ஆமாமாமா... அதானே என்னோட வேலை?'' அவன் நக்கலாகக் கேட்டுவிட்டு நையாண்டியாகச் சிரித்தாள். பிறகு சொன்னாள்.

''சிவா... ஒவ்வொரு பிறவியும் ஏதோ ஒரு பாரத்தைச் சொமந்துட்டு வந்து நிக்குது... அதை யாரும் எறக்கி வைக்கவும் முடியாது... யாரும் கூட்டவோ குறைக்கவோ முடியாது.''

''வேதாந்தம்?''

யதார்த்தம். அதைவிடு. எங்க எதிர் வீட்டு மாடிப் போர்ஷன்ல ஒரு ரூம் காலியாயிருக்கு. வாடகை ஆயிரம் ரூபா. முடியுமா?''

அவன் மௌனமாக அவளைப் பார்த்தான்.

''பயப்படாதே! உன் மனமாற்றத்துக்கு எந்த முயற்சியும் செய்ய மாட்டேன்.''

''சரி.''

**வா**ழ்க்கை எல்லோருக்கும் பழக்க தோஷம் என்ற அர்த்தம் உட்பட ஏதோ ஒரு மையப்புள்ளியை வழங்குகிறது என்று அஜிதா சச்சிதானந்தனை வளர்ப்பதற்குப் பட்ட பாட்டில் புரிந்தது. பணம் பண்ணுவது... டாஸ்மாக் சரக்கு போடுவது என்ற லெவலோடு நின்றுவிட்ட வெங்காய மண்டி தேவராஜனோ இல்லை... எந்த மகானோ கிடைத்திருந்தால் கூட அஜிதா இதே மாதிரி தான் உழன்றிருப்பாள் போலத் தோன்றியது.

எந்த வைத்தியத்திலாவது சச்சிதானந்தனின் இளம்பிள்ளை வாதம் குணமாகிவிடுமா என்று அவள் ஓடியோடி அலைவது, மருத்துவச் செலவுக்கு தேவராஜனையே நம்பாமல், நாலைந்து வீடுகளில் ட்யூஷன்... எல்லாம் மனத்தைக் குடைந்தது. எப்படி இருந்தவள்? மேடையிலும் சரி... விளையாட்டு மைதானத்திலும் சரி... அவள் தோன்றியதுமே கிடைத்த கைதட்டல்கள் இன்னும் காதிலே ஒலித்துக் கொண்டிருக்கின்றன... ஏன்... ஏன்...ஏன்...

''அலுப்பா இல்லியா அஜிதா?''

''அதான் சிவா அம்மாங்கறது. இதுக்குத்தான் பொம்பளயாய்ப் பிறப்பெடுத்து வந்துருக்கோம்.''

''இருந்தாலும்...''

''உனக்குப் புரியாது சிவா! நீ அதை அசட்டுப் பாசம்னோ இல்ல ஏதோ ஒரு லேபிள் குத்துவே. எல்லாத்தையும் ஆயுதம் ஏந்தி பஸ்மமாக்கிடலாம்னு பார்ப்பே!''

அவன் அவளுடைய சாந்தத்தை வேடிக்கை பார்த்தான்.

அவள் தொடர்ந்தாள். "ஒருவேளை நீயே ஜெயிச்சாலும் ரிஸல்ட் பெரிசா ஒண்ணும் ஆய்டாது இங்கே. அப்பவும் இப்படி எத்தனையோ பேரு செக்குமாட்டு ஒழப்பிலே சுத்தித்தான் தீரணும்."

சிவா அஜிதாவை அல்ல... அவளைச் சுழல வைத்துக் கொண்டிருக்கும் மையப் புள்ளியைப் புரிந்துகொள்ளத்தான் முயன் றான். பராமரிப்பைப் புறக்கணித்த தந்தை யின் அசிரத்தையோடு, ஒரு நிச்சயமில்லாத எதிர்காலத்தை நோக்கிச் சூம்பிய கால் களுடன் தவழுகின்ற சச்சிதானந்தன்தான் அவள் வாழ்க்கையின் மையப்புள்ளி என்று ஏற்க மனசும் மறுத்தது.

இதுதான் எல்லாக் கனவுகளும் லட்சி யங்களும் நின்றுபோகிற டெர்மினலா? ஏன்? ஏன்? எந்தக் கேள்விக்கும் இங்கே விடை கிடையாது. கேள்வி என்று ஒன்றைக் கேட்டால் வித்தியாசமான ஜந்துவைப் பார்ப் பதைப் போலத்தான் பார்க்கிறார்கள். சிவா கேள்வி கேட்பதை ஒத்தி வைத்துவிட்டு அன் றாடம் போலீஸ் ஸ்டேஷனில் கையெழுத் துப் போட்டபடி தனது கட்சி மேலிடத்தி லிருந்து அடுத்து என்ன செய்ய வேண்டும் என்ற உத்தரவை எதிர்பார்க்கத் தொடங்கி னான். மனசு அலைபாய்வது நிற்கவில்லை.




ஏழு மணிக்கு அஜிதா சொன்னபடி தேவராஜனும் வரவில்லை. அவளும் வர வில்லை. சாவியை பேண்ட் பாக்கெட்டில் போட்டுக்கொண்டு சிவா போலீஸ் ஸ்டேஷனுக்குப் புறப்பட்டான்.

தெருமுனை திரும்பியபோது அவன் அருகே அஜிதா போன ஆட்டோ வந்து நின்றது. சிவா நின்றான். ஆட்டோ டிரைவர் இறங்கி வந்தான்.

"சார்... ஒரு பேட் நியூஸ். அம்மா சொல்லிடச் சொன்னாங்க."

"பேட் நியூஸா? என்ன?"

பக்கத்தில் வந்து "அவங்க வீட்டுக் காரரை மார்க்கெட்ல யாரோ விரோதத்துல கத்தியால குத்திட்டாங்க. அவரு ராயப் பேட்டை ஆஸ்பத்திரிலே அட்மிட் ஆயி ருக்காரு. சொல்லிடச் சொன்னாங்க."

சிவா போலீஸ் ஸ்டேஷனில் கையெழுத் துப் போட்டுவிட்டு ராயப்பேட்டை ஆஸ் பத்திரிக்கு ஓடினான்.

விஸிட்டர்ஸ் பெஞ்சில் படுத்திருந்த சச்சி யின் கன்னத்தில் கண்ணீர் உருண்டது. வார்டு படுக்கையிலிருந்து பால் வாங்க ஃப்ளாஸ் கோடு வெளியே வந்த அஜிதா, அவனைப் பார்த்து நின்றாள்.

"எப்படி இருக்காரு?"

"அபாயம் ஒண்ணுமில்லே. நெறைய ரத்தப்போக்கு. குடியில்லேன்னா சீக்கிரம் கொணமாயிடலாம்னு டாக்டர் சொல்றாரு."

அஜிதா உறைந்த முகத்தோடு சொன் னாள். பார்வை சச்சியின் மீது பதிந்திருந்தது.

"அஜிதா, ஏதாவது உதவி வேணுமா? கேளு."

"நன்றி சிவா. தேவைப்பட்டா சொல் றேன்"- நான் கேட்கமாட்டேன் என்பதைப் போல் அஜிதா சிரித்தாள்.

"கொஞ்ச நேரம் சச்சியோட ஒக்காந் துட்டு இரு. நான் பால் வாங்கிட்டு வந்து டறேன்." அஜிதா ஒரு தன்னம்பிக்கையின் மிடுக்கோடு நடந்தாள். அது அவனுக்குள் ஒரு மின்சக்தியைப் பாய்ச்சியது. 'அஜிதா அவளது தந்தையைப் போலத் தகர்ந்து போக மாட்டாள்.' என்ன நிம்மதி! நல்லமுசுனேந் தல் வயலிலே தலை உயர்த்தி நிற்கிற ஒரு தானிய மணியைப் பார்த்த நிம்மதி! ●



ஸ்ரீ:
ஸ்ரீ ராம ஜெயம்



ஸ்ரீ மயூரவல்லி சமேத ஸ்ரீ ஆதிகேசவாய நம:
ஸ்ரீ யோக நரசிம்ம சமேத மஹா சுதர்ஸனாய நம:
ஸ்ரீ விகனஸ மஹாகுரவே நம:

**ஸ்ரீ மஹா சுதர்ஸன ஜெயந்தியை** முன்னிட்டு

# ஸ்ரீ சுதர்ஸன மஹா யக்ஞம்

**1 லட்சம் ஆவ்ருத்தி மூல மந்திர ஜப பாராயணம்**

நாள்: 08-08-2007 புதன் முதல் 12-08-2007 ஞாயிற்றுக்கிழமை வரை (5 நாட்கள்)

ஸ்ரீ சுதர்ஸன மஹா யஜ்ஞம், நடைபெறும் இடம்:
**ஷோபனா கல்யாண மண்டபம், 74, ஆர்யகௌடா ரோடு, மேற்கு மாம்பலம், சென்னை - 600 033. செல்: 9444080130, 98410 63151**

**ஸ்ரீ சுதர்ஸன மஹா யக்ஞம் கட்டணம்**
ரூ. 110/- ரூ. 250/-
ரூ. 540/- ரூ. 1100/-
ரூ. 2700/- ரூ. 5400/-

கீழ்கண்ட அனைத்து கட்டணங்களுக்கும் யாக பூஜையில் விசேஷ சங்கல்பம் செய்து ரக்ஷை அணிவித்து, குங்குமம், அட்சதை, பிரசாதங்களும் கீழ்கண்ட பொருட்களும் வழங்கப்படும்.

| கட்டணம் | சுதர்ஸன யாகம் |
|---|---|
| ரூ. 110/- | காப்பர் சுதர்ஸன டாலர், சுதர்ஸன படம். |
| ரூ. 250/- | காப்பர் சுதர்ஸன டாலர், காப்பர் சுதர்ஸன யந்திரம், சுதர்ஸன படம். |
| ரூ. 540/- | காப்பர் சுதர்ஸன டாலர், வெள்ளி தாயித்து, காப்பர் சுதர்ஸன யந்திரம், சுதர்ஸன படம். |
| ரூ. 1100/- | வெள்ளி சுதர்ஸன டாலர், வெள்ளி தாயித்து, காப்பர் சுதர்ஸன யந்திரம், சுதர்ஸன படம். |
| ரூ. 2700/- | வெள்ளி சுதர்ஸன டாலர், வெள்ளி தாயித்து, ஸ்ரீ மஹா சுதர்ஸன ஜனாகர்ஷண தனாகர்ஷண சகல சாம்ராஜ்ய லக்ஷ்மீ யந்திரம், சுதர்ஸன படம். |
| ரூ. 5400/- | யாக பூஜையில் வைத்த கலசம், தங்க தாயித்து, வெள்ளி சுதர்ஸன டாலர், ஸ்ரீ மஹா சுதர்ஸன ஜனாகர்ஷண தனாகர்ஷண சகல சாம்ராஜ்ய லக்ஷ்மீ யந்திரம், சுதர்ஸன படம், ஒரு தம்பதியர்க்கு கலச தீர்த்தம் சேர்க்கப்படும். |

இங்ஙனம்: **ஸ்ரீ சுதர்ஸன மஹா யக்ஞ கமிட்டி**

**S. ஸ்ரீ ரங்கராஜ பட்டாச்சாரியார், T. சம்பத்குமார், T. சுதர்ஸன், M. பிரவீன் குமார், B. கிருஷ்ண மூர்த்தி**

சுதர்ஸன யாகத்திற்கு டிக்கெட் கிடைக்கும் இடம்
மற்றும் M.O. / D.D. / காசோலை அனுப்ப வேண்டிய முகவரி

**ஸ்ரீ சுதர்ஸன மஹா யக்ஞ கமிட்டி, S. ஸ்ரீ ரங்கராஜ பட்டாச்சாரியார்**
TVR subbi chetty vasantha mandapam,
# 14, Chitra kulam west street, Mylopore, Chennai - 600 004 Ph : 2495 0453,
Cell: 9444080130, 98410 63151, 98842 81412

குறிப்பு: ஸ்ரீ சுதர்ஸன ஜனாகர்ஷண, தனாகர்ஷண சகல சாம்ராஜ்ய லக்ஷ்மீ யந்திரம் வீட்டில் அல்லது வியாபார இடத்தில் மாட்டி பூஜை செய்தால், அவ்விடத்தில் அதிக அளவில் ஜனங்கள் பெருகி வியாபாரம் அதிகரிக்கும், சகல சம்பத்துகளும் பெருகும். **M.O./ D.D** / காசோலை அனுப்புபவர்கள் தங்கள் பெயர், கோத்திரம், நட்சத்திரம் குறிப்பிட்டு முகவரியை விபரமாக எழுதி அனுப்பவும்.
(**M.O./ D.D** / காசோலை - அனுப்புவர்களுக்கு பிரசாதம் (**Speed Post**-ல்) அனுப்பப்படும்.

"காழ்ப்புணர்ச்சியற்ற விமர்சனம்தான் எந்த ஒரு ரசிகனையும் மேம்படுத்தும் என்பதை டாக்டர் ராமதாஸ் புரிந்துகொள்ள வேண்டும்!"



✱ சுந்தர்

திருவண்ணாமலையில் நடைபெற்ற குறும்பட விழாவொன்றில் பா.ம.க. நிறுவனர் டாக்டர் ராமதாஸ், 'சினிமா நடிகர்களுக்கு ரசிகனாக இருப்பவன் முட்டாள். குறும்படங்களைத் தயாரிப்பவர்களே அறிவு ஜீவிகள்' என்று பேச, கொந்தளித்துப் போயிருக்கின்றன தமிழ் சினிமா நடிகர்களின் ரசிகர் மன்றங்கள். நம்மிடம் பேசியவர்களின் உள்ளக் குமுறலிலிருந்து...

**ராமுவசந்தன்: (விஜயகாந்த் தலைமை ரசிகர் மன்றத் தலைவர்)**

ராமதாஸ் சொல்றதை யாரும் பெருசா எடுத்துக்க வேணாம். ஒவ்வொரு கால கட்டத்திலும் ஒவ்வொரு மாதிரி பேசற சந்தர்ப்பவாதி அவர். சினிமாதான் சமுதாயத்தைக் கெடுக்குதுன்னு சொல்வார். ஆனா சினிமாவிலிருந்து வந்த ஜெயலலிதாவோடு கூட்டணி வெச்சிப்பார். கேப்டனோட ரசிகர்கள் முட்டாளாக இருந்தா, அரசியல் லெவலுக்கு அவங்கள கொண்டு வந்திருக்க முடியுமா? இல்ல, அவங்கதான் கட்சி ஆரம்பிச்ச இந்த ஒண்ணே முக்கால் வருஷத்துல தமிழக லெவல்ல மூணாவது இடத்தை தே.மு.தி.க.வுக்குக் கொடுத்திருப்பாங்களா? இதை சாதாரண இடம்னு ராமதாஸால சொல்லத்தான் முடியுமா? பா.ம.க.வ முன்னுக்குக் கொண்டு வர அவர் எத்தன வருடங்கள் உழைச்சிருக்கார்! ஆனா தே.மு.தி.க. அப்படியா? மிகக் குறுகிய காலகட்டத்துல எத்தன பெரிய



# ராமதாஸுக்கு எதிராக ரசிகர் மன்றங்கள்!

# சினிமா நடிகர்களுக்கு ரசிகனாக இருப்பவன் முட்டாளா?


* ராமு வசந்தன்

வளர்ச்சி! யாரால விளைஞ்சது இது? அப்பழுக்கற்ற சிந்தனையுள்ள, தன்னலம் கருதாத கேப்டனோட ரசிகர்கள்தான் காரணம். அவங்க முட்டாளா இருந்திருந்தா இது சாத்தியமா? இவ்வளவு ஏன்... ராமதாஸோட கோட்டைன்னு சொன்ன விருத்தாசலத்திலேயே வெற்றி வாகை சூடினோமே... முட்டாளால செய்யக்கூடிய காரியமா இது?!

**சுந்தர்: (ரஜினி ஃபேன்ஸ் டாட்காம், தமிழ்நாடு கரஸ்பாண்டன்ட்)**

"இந்த மண்ணில் சீரழிக்கப்படுபவர்கள் கட்சி உறுப்பினர்களா, ரசிகர் மன்றத்தினரா என்று இந்தியா முழுவதும் வாக்கெடுப்பு நடத்திப் பார்த்தால், 90 சதவிகிதம் கட்சி உறுப்பினர்களே பாதிக்கப்படுகிறார்கள் என்கிற உண்மை விளங்கும்.

இத்தனைக்கும் கட்சி உறுப்பினர்கள் ஏதேனும் ஆதாயத்தை எதிர்பார்த்துத்தான் உழைக்கிறார்கள். ஆனால், ரசிகர் மன்ற உறுப்பினர்கள் அப்படிப்பட்டவர்கள் அல்லர்; சம்பந்தப்பட்ட நடிகரின் மீது கொண்டுள்ள அன்பினால்தான் அவர்கள் எதையுமே செய்கிறார்கள்.

ரஜினி ரசிகர்களாகிய நாங்கள் எங்கள் அன்புக்குரிய ரஜினிக்காகவே, அவருடைய பெயராலேயே பல நல்ல காரியங்களைச் செய்து வருகிறோம். சமூகத்தில் மிகவும் பாதிக்கப்பட்ட, வறுமை நிலையில் உள்ள மக்களுக்குத் தொண்டு செய்கிறோம். ஆனால் மீடியாவோ, நாங்கள் பாலாபிஷேகம் செய்ததை மட்டும் பெரிதாக்கிச் செய்தி பரப்புகிறது.

சுனாமியால் பாதிக்கப்பட்டவர்களுக்குக் கூட நாங்கள் லட்ச ரூபாய் நிதி வழங்கினோம். எங்கள் வசம் இரத்ததானம் செய்யும் அணியினரும் உண்டு. இவற்றையெல்லாம் நாங்கள் ஏன் செய்ய வேண்டும்? அரசியல்வாதிகள் இப்படிப்பட்ட சேவைகளையெல்லாம் நல்ல மனத்துடன் செய்வதேயில்லை, அப்படிச் செய்தாலும் அதிலும் ஏகப்பட்ட குளறுபடி! இந்த நிலையில்தானே, ரஜினி ரசிகர்களாகிய நாங்கள் மக்களுக்குச் சேவை செய்கிறோம்!

பொதுவாக ரசிகர்கள், ஒரு படம் ரிலீஸ் ஆகும்போது, தங்கள் உணர்ச்சிகளை பல்வேறு விதங்களில் வெளிப்படுத்துகிறார்கள். அதீதமாகப் போகாமல் நாகரிகமாக வெளிப்படுத்த வேண்டுமென்பது உண்மைதான். அதனை அழகாகச் சுட்டிக்காட்டி அறிவுறுத்தலாமே... மாறாக ஒட்டுமொத்தமாக ரசிகர்களை முட்டாள்கள் என்பது தவறானது. இன்னொன்று, யாரோ சிலர்தான் அதீதமாக நடந்துகொள்கிறார்கள். எனவே காழ்ப்புணர்ச்சியற்ற விமர்சனம்தான் எந்த ஒரு ரசிகனையும் மேம்படுத்தும் என்பதை டாக்டர் ராமதாஸ் புரிந்துகொள்ள வேண்டும்.

**ஜெயசீலன்: (விஜய் தலைமை ரசிகர் மன்றத் தலைவர்)**

டாக்டர் ராமதாஸ் சொல்ற மாதிரியான தன்மை எம்.ஜி.ஆர்., சிவாஜி காலத்துல வேணா இருந்திருக்கலாம். ஆனா இன்

னைக்கு எல்லா ரசிகர்களுமே தெளிவாயிட்டாங்க. விஜய் ரசிகர்கள் ரொம்பவே விவேகமானவங்க. ரசிகர் மன்றத்தைக் கூட நற்பணி மன்றமாத்தான் நாங்க செயல்படுத்தறோம். கட்சி, கொள்கை, கூட்டணின்னு நாங்க போறதில்ல. அதற்கு மாறாக ஏழைகளுக்கு உதவி பண்றோம். இரத்த தானம் முகாம் நடத்துறோம். படிக்கக் கஷ்டப்படுற மாணவ, மாணவிகளுக்கு வழிகாட்டியா இருக்கோம். படிக்கப் பணமில்லாம தவிச்ச வியாசர்பாடியைச் சேர்ந்த சசிகலான்ற பெண்ணை கோவையில் இன்ஜினீயரிங் படிக்க வச்சி, இன்னைக்கு அவங்க டைடல் பார்க்ல மாசம் இருபத்தஞ்சாயிரம் சம்பளம் வாங்குறாங்க. முட்டாளா முடியக்கூடிய செயலா இது?

ராமதாஸ் சொன்னதைப்போல் குறும்பட, ஆவணப்படத் தயாரிப்பாளர்கள் மட்டும்தான் அறிவுஜீவிகளா? குறும்பட இயக்குநர் லீனா மணிமேகலையும் நம்மிடம் பேசினார்...

"சினிமா சார்ந்த விஷயங்களுக்குத்தான் இதுவரை அரசியல் தலைவர்கள் ஆதரவு தெரிவிச்சுட்டு வந்தாங்க. இடதுசாரி தலைவர்கள் இதுல விதிவிலக்கு. முதல் முறையா ஓர் அரசியல் கட்சித் தலைவர் மாற்று முயற்சிகளான குறும்படங்களைப் பத்தி நம்பிக்கையளிக்கும் விதமா பேசியிருக்கறது ரொம்பவே ஆறுதலான விஷயம். ஆனா குறும்படங்கள் எடுக்கறவங்க மட்டும்தான் அறிவுஜீவியான்னா அது அவரோட கருத்துன்னுதான் நான் சொல்லணும். சினிமா, ஆவணப் படம் ரெண்டுலயுமே உழைப்பு ஒண்ணுதான். எது ஒண்ணும் இன்னொன்னைவிட உயர்வானதோ, தாழ்வானதோ இல்ல. எப்படி நாம பண்றோம்ங்கறதுலதான் விஷயம் இருக்கு."

- நிதர்ஸனா

* லீனா மணிமேகலை

**முதல் முறையா ஓர் அரசியல் கட்சித் தலைவர் மாற்று முயற்சிகள் பத்தி நம்பிக்கை அளிக்கும் விதமா பேசியிருக்கறது ரொம்பவே ஆறுதலான விஷயம்!**

## படமெடுக்கும் பக்தர்கள்!

மிக மகிழ்ச்சியில் இருக்கிறார் இயக்குநர் அன்பழகன். இருக்காதா பின்னே..? ஆன்மிகச் சீர்திருத்தவாதியான வைகுண்ட சாமியின் வரலாற்றைப் படமாக எடுக்க நினைத்தது முதலே மனிதருக்கு ராஜயோகம்தான்.

"அய்யாவழி - படம் தயாரிக்க அவரின் பக்தர்களிடம் நிதி திரட்டுவதாக அறிவிக்கப்பட்டதுமே, அய்யாவழி பக்தர்கள் தாராளமாக நிதி தர முன் வந்தனர். அவர்களின் ஆர்வத்தைப் பார்த்து வியந்து போனேன். எந்த நிதியையும் நன்கொடையாகப் பெறாமல் படத் தயாரிப்புப் பங்காகப் பெற முடிவு செய்தோம். இதன்படி படத்தின் பங்குதாரர்களாகப் பலர் இணைந்துள்ளனர். இதுவரை ஒரு கோடியே எழுபத்தைந்து லட்ச ரூபாய் வசூலாகியுள்ளது. படத்தின் பாடல் பணிகள் முடிவடைந்து விட்டன. அடுத்த மாதம் படப்பிடிப்பு தொடங்கவிருக்கிறது" என்கிறார் அன்பழகன் மகிழ்ச்சியுடன்.

- விநோதினி



# ஹாரி பாட்டரும் ஃபீனிக்ஸ் கட்டளையும்!

‘‘சித்தப்பா, சிவாஜி படத்துக்குத் தான் டிக்கெட் கிடைக்கலைன்னு ஒரு மாசமா டபாய்ச்சுட்டு இருக்கீங்க, போகட்டும்! இன்னிக்கு 'ஹாரி பாட்டர்' ரிலீஸ் ஆகுது. ஈவ்னிங் ஷோவுக்குக் கூட்டிட்டுப் போவணும்!’’

காலையில ஆபீஸுக்குக் கிளம் பறப்பவே அண்ணன் பையன் கட் டளை போட்டுட்டதால சாயந்திரம் சீக்கிரமே வீட்டுக்குப் போய் பையனைப் பிக்கப் பண்ணிட்டுத் தியேட்டருக்குப் போனேன். உலக குட்டீஸ்களின் 'சிவாஜி'யாச்சே ஹாரி பாட்டர்! தியேட்டர்ல ஜேஜேன்னு கூட்டம். ஹவுஸ்ஃபுல்! முன்னாடியே போனதால டிக்கெட் கிடைச்சது.

வழக்கம் போலத்தான் முதல் ஸீன்ல ஆரம்பிக்கிற மாயாஜாலம், கடைசி ஸீன் வரைக்கும் கட்டிப் போடுது. தீப்பெட்டியோட உள் பாகத் தைத் திறக்கற மாதிரி பெரிய கட்டடம் திறந்து நீளமாகறது, சுவர்ல கதவு தானா உருவாகறது, பறக்கும் குதிரை மாதிரி யான விநோதப் பறவைகள் - இப்படிப் படம் முழுக்க கிராஃபிக்ஸ் வித்தை. மிரட்டும் இசை.

தீய சக்திகளின் தலைவன் திரும்பி வந்து உலகத்தை அழிக்கப் போறதா கனவு காணும் ஹாரி பாட்டர், அதைத் தன்னோட மந்திரப் பள்ளியின் ஆசிரியர் களிடம் சொல்றான்; சிலர் அதை நம்ப றாங்க. புதிதா பொறுப்பேற்கும் பேரா சிரியை அதை நம்ப மறுத்து ஹாரி பாட்டரையும் அவனுக்கு உதவற மாண வர்களையும் கண்டிக்கறாங்க. இதை யெல்லாம் மீறி ஹாரி பாட்டர் டீம் அந்த தீயசக்தித் தலைவனை ஜெயிக்கறதுதான் க்ளைமாக்ஸ்!

படம் முடிஞ்சதும் பையன்கிட்டே கேட்டேன்: ‘‘எப்படிடா இருக்கு?’’

‘‘சூப்பர் சித்தப்பா.’’

‘‘அப்போ சிவாஜி வேணாமில்லே?’’

‘‘அது எப்படி? இன்னொரு நாள் கூட்டிட்டுப் போகணும்.’’

இவனை எந்த மந்திரம் போட்டும் ஜெயிக்க முடியாதுன்னு பெருமூச்சு விட்டேன்.

– ராஜ்

**ஹ**லோ வாசகர்களே! இந்த வார தித்திக்கும் திங்களுக்குள் நுழைவோமா?

**"நா**ன் ஹேமலதா ராமன் (சென்னை). கல்கி சமீபகாலமாகவே புது லுக்கோட வந்துட்டு இருக்கறது ரொம்ப சந்தோஷமா இருக்கு. சொல்லப்படற விஷயங்கள் சுருக்கமாவும் தெளிவாவும் இருக்கு. இப்படித்தான் இருக்கணும். ஏன்னா இப்ப எல்லாம் லைட் ரீடிங்கா இருந்தாத்தான் வாசகர்கள் படிப்பாங்க."

"சரிங்க, குறைகள்னு ஏதாவது சுட்டிக் காட்ட முடியுமா?"

"பெருசா ஒண்ணுமில்லே. நிறைய போட்டிகள் வைக்கறீங்க. அதனோட முடிவுகளை வெளியிடறதுல தாமதம் பண்றீங்க. அந்த மாதிரி செய்யும்போது ஆர்வம் போய்டுது. உதாரணமா சூர்யாவைச் சந்திக்கிற போட்டியின் முடிவை இன்னும் வெளியிடலை."

"அவர் ஷூட்டிங் பிஸியில இருக்கறதால டைம் கிடைக்கலை. முயற்சி செய்துட்டு இருக்கோம். சீக்கிரமே ரிசல்ட் வரும். உங்க கருத்துக்கு நன்றி மேடம்."

**"வ**ணக்கம். நான் இராஜேந்திரன் (கபிஸ்தலம்). முப்பது வருஷமா கல்கியைப் படிக்கிறேன். தலையங்கமும் தராசும்

✱ இடமிருந்து வலம்): இராஜேந்திரன், குப்புசாமி, கமருதீன், ஹேமலதா ராமன், பிருந்தா






# தித்திக்கும் திங்கள்!

நான் விரும்பிப் படிக்கிற பகுதிகள். அன்னையில இருந்து இன்னிக்கு வரைக்கும் தன்னுடைய நடுநிலைக் கொள்கையில இருந்து மாறாம இருக்கு.''

''முப்பது வருஷமா படிக்கிறதா சொல்றீங்க. கல்கியில் ஆக்கபூர்வமான மாற்றங்கள் தெரியுதா சார்? மாற்றங்கள் போதுமானதா இருக்கா?''

''நல்ல மாற்றங்கள் இருக்கு சார். ஆபாசமில்லாம அதே நேரம் அழகுணர்ச்சியோடு படங்களை வெளியிடறீங்க. இதற்கு மேலும் மாற்றம் செய்ய முடியாது சார். அப்படி செய்தா மற்ற பத்திரிகைக்கும் கல்கிக்கும் வித்தியாசம் இல்லாமப் போயிடும். கல்கியின் தனித்தன்மையைத் தொடர்ந்து கடைபிடிச்சிட்டு இருக்கீங்க.''

''நன்றி சார். தொடர்ந்து உங்க கருத்துகளை எழுதுங்க.''

**''எ**ன் பெயர் கமருதீன். தஞ்சை அனார் கலிங்கற பெயர்ல கவிதை, ஜோக்ஸ் எல்லாம் எழுதுவேன். முன்னாடி எல்லாம் கல்கியை நான் மட்டும்தான் படிப்பேன். இப்ப வீட்ல எல்லோரும் புரட்டறாங்க. அந்த அளவுக்கு வடிவமைப்பில் நல்ல மாற்றம் தெரியுது. 'உலக அதிசயம் யாருக்கு?' கட்டுரை சிறப்பா இருந்தது. யாரும் சொல்லாத விஷயம். பார்த்திபன் கனவு தொடரைப் படிக்க ஆவலோடு இருக்கேன்.''

''ஒவ்வொரு வாரமும் கவனமா படிங்க. வித்தியாசமான போட்டிகள் உங்களை மாதிரி வாசகர்களுக்குக் காத்திட்டிருக்கு.''

**''நா**ன் பிருந்தா ரமணி (மதுரை). இருபது வருஷ கல்கி வாசகி. அருள்வாக்கும், வாரம் ஒரு பாசுரமும் தவறாமப் படிப்பேன். மருத்துவம், கல்வி, கலை, ஆன்மிகம்னு எல்லாமே சரியான அளவுல கொடுக்கறீங்க. அடுத்த வாரம் என்ன இருக்குங்கற ஆவல் ஏற்படுது. கீப் இட் அப்.''

**''வ**ணக்கம் சார். என்னோட பேர் குப்புசாமி (கோவை). சமீபத்தில் கோவையில நடந்த 'உங்கள் ஊரில் கல்கி' நிகழ்ச்சியில கலந்துட்டு என்னோட கருத்துகளைச் சொன்னேன். நான் டைப்ரைட்டிங் இன்ஸ்டிடியூட் வெச்சிருக்கேன். இங்கே வர்ற மாணவ, மாணவிகளையும் கல்கியைப் படிக்கச் சொல்வேன்.ஏன்னா கல்கியைத்தான் தைரியமா சிபாரிசு செய்யலாம். தரம் தாழ்ந்த விஷயங்களோ, முகம் சுளிக்கற படங்களோ இருக்காது. சினிமா எல்லோரையும் கவரும் விஷயம். அதை விட்டுட வேணாம். இதே தரத்தோடு இன்னும்கூட பக்கங்களை ஒதுக்கிச் செய்திகளை வெளியிடலாம்.''

''நிச்சயமா செய்வோம் சார் நன்றி.''

# பெண்களின் கூந்தலுக்கு



# இயற்கையிலேயே மணம்

★ என்.குப்புசாமி, கோவை

**தாங்கள் மட்டும் ஷாப்பிங் சென்று விட்டு வீட்டில் வாங்கிக் கட்டிக்கொண்ட அனுபவம் உண்டா...?**

மனைவியை அசத்த ஒருமுறை மார்க்கெட்டுக்குச் சென்றேன்... வீராப்பாக நான் வாங்கிக்கொண்டு வந்த வெண்டைக்காய்களை, வியாதியஸ்தனைப் பார்ப்பதுபோல பார்த்த அவள் "அய்யய்ய... என்ன இது... இப்படிப் பிஞ்சு வெண்டைக்காயா வாங்கிட்டு வந்திருக்கீங்க... அதுல பாதி பிஞ்சு போன வெண்டைக்காயா வேற இருக்கு" என்று கூறிவிட்டுத் தன் தோளால் தன் முகவாயை இடித்துக் காட்டினாள். ரோஷமோ ரோஷமான நான், மறுநாள் பிஞ்சுக் காய்களைப் பகிஷ்கரித்து வாங்கி வந்த வெண்டைக்காய்களை, நடுக்கூடத்தில் பரப்பி வைக்க, பாவப்பட்ட ஜன்மங்களைப் பார்ப்பதைப்போல பரிகாசமாகப் பார்த்த பத்தினி "அய்யய்ய... என்ன இது... இப்படி முத்தலா வெண்டைக் காயை வாங்கிட்டு வந்திருக்கீங்க" என்று தீர்ப்பளித்து விட்டு, தண்டனையாகத் தனது தோளால் எனது முகவாயை இம்முறை இடித்துக் காட்டினாள். சற்றும் மனம் தளராத விக்ரமனாக நான், அதற்கு அடுத்தநாள், பூதக் கண்ணாடியோடு மார்க்கெட்டுக்கு மெனக்கெட்டு சென்று, பிஞ்சு-முத்தலைத் தவிர்த்து மீடியமாக வாங்கி வந்த காய்களைப் பார்த்த அவள் மௌனம் சாதித்தாள். மௌனம் சம்மதத்துக்கு அறிகுறி என்று நான் மார் தட்டிக் கொள்வதற்குள், "அய்யய்ய... என்ன இது... எப்ப பாரு வெண்டைக்காயா... உங்களுக்கு வெண்டைக்காயை விட்டா வேற கறிகாயே தெரியாதா...?" என்று கூறி

கேலியாக எனது வெந்த புண்ணில் வெண்டைக்காயைப் பாய்ச்சினாள். வெண்டைக்காயால் வெயிலில் மண்டை காய்ந்த நான், அன்றிலிருந்து ஷாப்பிங்கைப் பொருத்த அளவில் படிதாண்டாப் பத்தனானேன்.

**✱ சாமி, ஸ்ரீ ரமணாசிரமம், திருவண்ணாமலை**

**கோடியில் ஒருவர்தானே கோடீஸ்வரனாக முடிகிறது...என்ன காரணம்...?**

திருவண்ணாமலையில் -அதுவும் ஸ்ரீ ரமணாசிரமத்தில் இருந்துகொண்டு 'கோடியில் ஒரு கோடீஸ்வரனாக' இருக்க ஆசைப் படலாமா... 'லட்சத்தில் ஒரு லட்சியவாதியாக' இருங்க சாமி...

**✱ ரகுநாதன், மதுரை**

**பெண்களின் கூந்தலுக்கு இயற்கையிலேயே மணம் உண்டா?**

சங்ககாலக் கேள்வி இது... செயற்கையான இந்தக் காலத்தில் பெண்கள், மாய-மான் விளம்பரங்களால் வசீகரிக்கப்பட்டு 'ஷாம்பூ', 'கண்டிஷனர் ஹேர்- ஆயில்' இத்யாதிகளால் இயற்கையான கூந்தலை இம்சிக்கிறார்கள். இந்த முடி விளையாட்டை முடிவில்லாமல் தொடர்ந்தால், இருபது வருடங்களுக்குப் பிறகு இதே 'க்ரேஸியைக் கேளுங்கள்' பகுதியில் 'பெண்களுக்குக் கூந்தல் இயற்கையிலேயே உண்டா?' என்ற கேள்வி கேட்கப்படலாம்..

# உண்டா?

**✱ மூர்த்தி, அண்ணாநகர்**

**அமெரிக்காவில் 'ப்ராட்-வே' ஷோ நிகழ்ச்சிகளைப் பார்த்தேன்... சீன் - செட்டிங்ஸ் சூப்பராக இருந்தது... நமது நாடகங்களில் மட்டும் ஏன் சுமார் ரகம்...?**

இங்கு 'ஏழைக்கேத்த எள்ளுருண்டை...' அமெரிக்காவில் 'டாலருக்கேத்த டாம்பீகம்...' அம்புடுதே...

**✱ வே.ந.கதிர்வேல், வேலூர்**

**உங்கள் பெயருக்கு முன்னால் 'கிரேஸி' இருப்பதால் உங்களிடம் 'கிரேஸி'த்தனமான கேள்விகளை மட்டுமே கேட்க வேண்டுமா என்ன...?**

உங்கள் பெயருக்கு முன்னால் 'வே.ந.' இருப்பதால் உங்கள் கேள்விகளுக்கு மட்டும் பதில் சொல்ல வேநாம் என்று நான் சொல்லி தப்பிக்க முடியுமா என்ன...?

**✱ ந.சத்தியநாராயணன், அயன்புரம்**

**பிஸ்தா, ரவுடி இருவருக்கும் என்ன வித்யாசம் வாத்யாரே...?**

'பூமிங் -குப்பத்துல'... பிஸ்தா கடவுள்... ரவுடி - சைத்தான்...!




**✱ கே.ஆர்.ரவீந்திரன், சென்னை**

**மன்னிக்க முடியாத குற்றம் எது...?**

செய்த குற்றத்துக்கு மன்னிப்பு கேட்காமல் இருப்பது.

**✱ வனிதா, அரக்கோணம்**

**உங்களுக்கு எதன்மீது பொறாமை...?**

நடத்தையில் நிதானம்... நீண்ட நாள் வாழும் சாகஸம்... சுற்றுப்புற வம்பு தும்புகளில் மாட்டிக் கொள்ளாமல் 'தான் உண்டு தன் ஓடு உண்டு' என்று ஒதுங்கும் சாதுர்யம்... இதற்கெல்லாம் மேலாக வள்ளுவரே 'ஒன்றினுள் ஆமை போல் ஐந்தடக்கம் ஆற்றின்' என்று பாராட்டிய ஆமை மீது எனக்குப் பொறாமை...

# <<<< வளம் தரும் கோயில் >>>>

பரமேசுவரன் தக்ஷிணா மூர்த்தியாக யோக நிலையில் ஆழ்ந்திருந்தான். பார்வதி, தானும் அதேபோல் யோகத்தில் அமர எண்ணி அவ்விடத்துக்கு வந்தாள். ஈசன், மரங்களற்ற ஒரு வறண்ட பகுதியில் சுட்டெரிக்கும் வெயிலில் தன்னை மறந்த லயத்தில் இருக்கக் கண்டாள். தன்னுடன் துணைக்கு வந்த தேவ கன்னியர்களை வாழை மரங்களாக மாற்றி, அந்தப் பிரதேசத்துக்கே குளிர்ச்சியூட்டினாளாம் பார்வதி! அப்போது கல்வாழை மரங்களாக மாறிய தேவகன்னிகளின் தொடர் வரிசையில் - 'வாழையடி வாழையாக' வந்த கல் வாழைக் கன்றுகள் இன்றைக்கும் திருப்பைஞ்ஞீலியில் (பைஞ்ஞீலி-பசுமையான வாழை) காணக் கிடைக்கின்றன. இந்தக் கல் வாழைக் கன்றுகளுக்கு வெள்ளி மற்றும் ஞாயிறுகளில் பரிகார பூஜை செய்து மஞ்சள் சரடு கட்டி வைத்தால் திருமணத் தடை நீங்கும் என்கிற செய்தி உலகம் முழுதும் பரவி, இத் தலத்துக்கு நவீன மகிமையைச் சேர்த்துள்ளது.

திருச்சிராப்பள்ளியிலிருந்து ஒரு மணி நேரத்துக்கும் குறைவான பயண தூரத்தில் உள்ள திருப்பைஞ்ஞீலி கிராமத்தில் உள்ள ஞீலிவனேசுவரர் கோயிலில், சுவாமி சன்னிதித் திருச்சுற்றை வலம் வந்து வெளிப்படும்போது, இந்தக் கல்வாழை மரங்களைப் பார்க்கலாம். குரங்குகளின் தொல்லைக்கு அஞ்சி கம்பிக் கிராதி அறைக்குள் அவற்றைப் பாதுகாப்பாக வைத்திருக்கிறார்கள்!

மார்க்கண்டேயனுக்கு இரங்கி, யம தர்மனை உதைத்துத் தள்ளிய சிவனார், அவனது அதிகாரங்களை மீண்டும் அளித்த இடம் இந்த ஞீலிவனம் என்கிற திருப்பைஞ்ஞீலி என்பதாகவும் புராணமொன்று உண்டு. யமனின் அதிகாரங்கள் பறிக்கப்பட்டதால் உலகின் அனைத்துப் பகுதிகளிலும் மரணம் நிகழாதுபோய் சிருஷ்டி - ஸ்திதி - சம்ஹார லயம் தப்பிவிட்டதாம். ஆனால், திருப்பைஞ்ஞீலியில் மட்டுமே அவையெல்லாம் முறைப்படி நடந்து கொண்டிருந்தனவாம். ஆகவே தேவரும் முனிவரும் இவ்விடத்துக்கு வந்து யமதர்மனுக்கு உயிர்ப் பிச்சை அருளும்



● இராவணன் திருவாயில் கோபுரம்

சீதா ரவி

படி இறைவனிடம் வேண்ட, அவரும் அவ்வாறே அளித்துக் காத்திருக்கிறார். யமனின் அதிகாரங்களைத் திரும்ப வழங்கியதால் 'அதிகார வல்லபர்' என்ற பெயர் பெற்ற ஈசுவரன், ஸ்ரீலிவனநாதர் கோயிலின் வெளித் திருச்சுற்றில் ஒரு பாதாளக் கோயிலில், ஸோமாஸ்கந்த வடிவத்தில் காட்சி தருகிறார். குகைக்கோயில் போன்ற குடைவறை அமைப்பில் பார்வதி பரமேசுவரர்கள் அமர்ந்திருக்க, இருவரிடையே குட்டி முருகன்; ஈசுவரன் காலடியில் அச்சம் நிரம்பிய விழிகளுடன் யமதர்மன் காணப்படுகிறான். இது பல்லவர் காலக் கட்டமைப்பு என்கிறார்கள். சிற்ப பாணியும் குடைவறை அமைப்பும் இதர பல்லவர் கால சிற்ப வடிவங்களுடன் ஒத்துப்போகின்றன.

இந்த இருட்டுப் பாதாளக் கோயிலுக்குள் படி இறங்கிச் செல்ல வேண்டும். மின் வெட்டு என்பதால் குழல் விளக்கு எரியாத நிலையில் தீப ஒளியில்தான் நாம் தரிசனம் செய்ய வேண்டியிருக்கிறது.

''இந்த அதிகார வல்லபரை தரிசனம் பண்ணிவிட்டுத்தான் ஸ்ரீலிவனநாதரைப் பார்க்க வேண்டும்'' என்று விளக்குகிறார் ராமநாத குருக்கள்.

''சமீப காலமாக, இத் தலம் திருக்கடையூரைப் போல ஆயுள் ஹோம சாந்தி நடத்தும் இடமாகப் பிரபலமாகி வருகிறது. இந்த ஸோமாஸ்கந்தருக்கு அபிஷேகம் செய்த தீர்த்தத்தைத் தெளித்துக் கொள்வது ஆயுள் பலத்தைத் தரும் என்பதாலும், பக்கத்தில் உள்ள யம தீர்த்தத்தில் உள்ள நீர் மரண அவஸ்தையைப் போக்கி இதமான இறுதி கணங்களை அருளும் என்பதாலும் நிறைய பேர் திரண்டு வருகிறார்கள்'' என்கிறார்.

**பு**ராணம் சார்ந்த நம்பிக்கைகள் இந்தக் கோயிலின் மூலை முடுக்குகளிலெல்லாம் பதுங்கியிருக்க, வரலாற்றுச் சான்றுகள், கல்வெட்டு வடிவில் ஒவ்வொரு பிராகாரச் சுவரிலும்



* ஸ்ரீலிவனநாதர், நீள்நெடுங்கண்ணி

நிரம்பிக் கிடக்கின்றன.

நுழைவாயிலிலுள்ள மொட்டைக் கோபுரம் ஏழு நிலை அற்புதமாக எழுந்திருக்க வேண்டியது. அத் திருப்பணிக்கென சுந்தர பாண்டியன் எழுதி வைத்த சொத்துகளின் விவரம் (இறையிலி) கல்வெட்டுகளில் இருக்கிறது. வாசலிலோ, தூண் சிற்பங்கள் அலாதி அழகுடன் மிளிர்கின்றன. கோயில் முழு

# திசை தொழவே வான் அருளும்

# ஸ்ரீவாழைவனநாதர்!

வதுமே பிரமிக்க வைக்கும் கருங்கல் திருப்பணிகள் காணக் கிடைக்கின்றன.

நுழைந்ததுமே சோறுடையீசுவரரைத்தான் தரிசிக்க வேண்டும். அப்பர் பெருமான் இப்பகுதிக்குத் தல யாத்திரையாக வந்தபோது, வழியில் வெயில் கொடுமையில் வாடிச் சோர்ந்திருக்க, ஈசனே ஒரு முதியவர் வடிவில் தோன்றி அவருக்குக் கட்டுச்சோறு அளித்துள்ளான். அப்பர், தாம் திருப்பைஞ்ஞீலி பெருமானைத் தரிசிக்க வந்ததாகச் சொல்ல, ''நான் அந்தப் பெருமானுக்குப் பூஜை செய்யும் அர்ச்சகர்'' என்று இறைவன் அப்பருடன் 'விளையாட', திருப்பைஞ்ஞீலி வரை அப்பருடன் நடந்து வந்து அங்கே ரிஷப வாகனத்தின் மீது அவருக்குத் தரிசனமும் தந்திருக்கிறான்! அவ்விடத்தில்தான் - ஞீலிவனநாதர் சன்னிதிக்கு முன்னதாகவே - சோறுடையீசுவரர் கோயில் இருக்கிறது. சிறு கோயில்தான், ஆனால் பெரிய லிங்கம்; நந்திகேசுவரர் ஏனோ எதிரே ஒரு பள்ளத்தில் இருக்கிறார். அந்தப் பள்ளத்தில் கிடக்கும் குப்பைகளை நீக்க, 'யார் உழவாரப் பணி மேற்கொள்வார்களோ?' என்று கேள்வி எழுகிறது.

**சோ**றுடையீசுவரரை வணங்கிவிட்டு மேலே சென்றால் நடராஜர் மண்டபம். அதையும் கடந்து இராவணன் வாசல் கோபுரம்! ஸ்ரீராமன், ராவணனுடன் போரிட இலங்கைக்குச் செல்லும் முன் இங்கே வசிஷ்டரை வணங்கி ஆசி பெற்றானாம்! ஒன்பது படிகள் இறங்கிப் போனால் ஞீலிவனநாதர் சன்னிதி இருக்கிறது. இச் சன்னிதிக்குரிய நந்தியின் எதிரில் ஒன்பது சிறு பள்ளங்கள் - இவற்றில் விளக்கேற்றித் தொழும் வழக்கம் இருக்கிறது - நவ கிரஹங்களின் பிரதிநிதிகளாகக் கருதப்படுகின்றன. இத் தலத்தில் நவ கிரஹங்கள் கிடையாது.

ஞீலிவனநாதர் சுயம்பு மூர்த்தி. பசுமாடு பால் சொரிந்த இடத்தில் சிவலிங்கம் புதைந்திருப்பது கண்டெடுக்கப்பட்டிருக்கிறது. அகழ்ந்து எடுக்கும்போது திருமேனியில் ஆயுதம் பட்ட தழும்பு இருக்கிறது. சின்னஞ்சிறு திருமேனியாகக் காட்சி தரும் இந்த ஈசனின் புகழும் சக்தியும் சொல்லிலும் வடிவிலும் அடங்கமாட்டா. அப்பர், சுந்தரர், ஞானசம்பந்தர் மூவருமே இவரால் ஆகர்ஷிக்கப்பட்டுத் தேடி வந்திருக்கிறார்கள். மகாவிஷ்ணு, இந்திரன், காமதேனு என்று ஆரம்பித்து, வாயு - அக்னி - ஆதிசேஷன், வசிஷ்டர்- அர்ஜுனன், சப்த ரிஷிகள் - முசுகுந்த சோழன் என்று இங்கு வந்து வழிபடாதவர்களே இல்லை!

நாம் மட்டும் வணங்காதிருப்பது என்ன நியாயம்? அர்ச்சகர் அழகாக மந்திரம் ஓதுகிறபோது தலை சுழல வைக்கிற எல்லா புராண - வரலாற்று, பரிகார, நவீன மகிமைகளையும் ஒதுக்கி வைத்துவிட்டு, அந்தக் கணத்தின் ஆழத்தில் நம்மை லயிக்க வைக்கிறது ஞீலிவனநாதர் சன்னிதி.

**க**ருவறையையொட்டி காட்சி தரும் ரத்ன சபை நடராஜருக்கு, ஞீலிவனநாதரைப்

✱ யமதர்மன் சன்னதி



போலவே நான்கு கால பூஜை நடக்கிறது. அந்த நடராஜரின் ஆனந்தத் தாண்டவத்தை வசிஷ்டர் இங்கே இருந்தபடி ரசிப்பதாக ஐதீகம். சிதம்பரத்துக்குச் சென்று காணும் சிரமத்தைக் குறைத்து, அவருக்கு இங் கேயே 'ஹோம் தியேட்டர்' அமைத்துக் கொடுத்துவிட்டார் நடராஜர்!

**சு**வாமியையும் நடராஜரையும் தரி சித்துவிட்டு கல்வாழைத் தோட்டத்தைப் பார்த்துவிட்டு, தனிக் கோயில் கொண்டிருக்கும் நீள்நெடுங் கண்ணி என்கிற விசாலாக்ஷி யின் சன்னிதிக்கு விரை கிறோம்.

இரண்டு விசாலாக்ஷிகள் இங்கே நமக்கு அருள் செய்ய போட்டி போடுகிறார்கள். மூத் தவள் விக்ரஹம் பின்னமாகி விட்டதால் வேறொன்று உரு வாக்கி பிரதிஷ்டை செய்து பூஜைகள் ஆரம்பிக்கும் தரு வாயில், கைங்கர்யத்தை மேற்கொண்ட பக்தரின் கனவில் அம்பாள் தோன்றி, 'இது என்ன நியாயம்?' என்று கேட்டிருக்கிறாள்! ஆகவே பழைய திருவுருவத்தை மீண்டும் பிரதிஷ்டை செய்து அதற்கே பூஜைகள் செய்யலானார்கள். புதிய விசாலாக்ஷிக்கும் ஆராதனை உண்டுதான் - ஆனால் பழைய அம்பாள் இருக்கிற இடமே மூலஸ்தான மாகக் கொள்ளப்படுகிறது.

நீள்நெடுங்கண்ணி என்கிற விசாலாக்ஷி, தன் பெயருக்கேற்ப அகன்ற, அழகிய விழிகளையுடையவளாக நிற்கிறாள். 'ஆகர்ண தீர்க நயனம், மணிகுண்ட லாட்யம்' என்று, காதுவரை நீண்ட அவள் கண்களையும், அசையும் மணிகுண்டலங் களையும் வர்ணிக்கும் துதி ஞாபகத்துக்கு வருகிறது. இந்த அம்பாளுக்கு அழகான தாடங்கங்கள் செய்தளித்துள்ளனர் சிருங் கேரி மடத்தினர்.

சிவாச்சார்யார் ஸ்ரீலலிதா சஹஸ்ர நாமத்திலிருந்தும் பிற இரந்தங்களி லிருந்தும் தொகுத்து ராகமாலிகையாக துதி அமைத்து அர்ச்சனை செய்வதை மனம் குளிர்ந்து மகிழ்ந்து அவள் கேட்பதாகவே நமக்குத் தோன்றுகிறது. நீள் நெடும் விழிகளில் மலரும் மகிழ்ச்சி, கனிவாக மாறி, தீபாராதனை தருணத்தில் அருளாக ஒளிர் கிறது. சந்தனமும் குங்குமமும் அலங்கரிக்கும் அவள் நெற்றி யும், அதே சந்தனப் பொட்டு கள் மூக்குத்திகளாகி அழகு செய்யும் அவள் நாசியும் எழுதுதற்கரிய சித்திரமாக மிளிர்கின்றன. தீபாராதனையை ஒற்றிக் கொள்கிறோம். குங்கு மத்தையும் மலர்மாலை பிர சாதத்தையும் வாங்கிக்கொண்டு திரும்பி நடக்கிறோம். நீள் நெடுங்கண்ணியின் குளிர் பார்வையும் ஸ்ரீலிவனநாதரின் அருள் அமுதமும் கவசமாக நம்மைச் சூழ்ந்து தொடர் கின்றன.

* மொட்டை கோபுர வாசல்



'திருப்பைஞ்ஞீலி திசை
தொழுவார்கள் போய்
இருப்பர் வானவ ரோடு
இனிதாகவே'
என்று சும்மாவா சொன்னார்கள்!

படங்கள் : **ஸ்ரீரங்கம் திருநாவுக்கரசு**

**(நிறைந்தது)**




யாடல்..

**அமரர் கல்கி :** மகனே, எப்படி இருக்கிறாய்?

**கல்கி :** உங்கள் ஆசீர்வாதம் இருக்கிற வரையில் எனக்கு எந்தக் குறையுமில்லை, தந்தையே! உட்காருங்கள். எப்படியோ இப்போதாவது அலுவலகத்துக்கு வரும் வழி தெரிந்திருக்கிறதே...

**அமரர் கல்கி :** அப்படியெல்லாம் இல்லை. கொஞ்ச நாளைக்கு முன்னாடியே உன்னைப் பார்க்கணும்னு நினைச்சேன். வாசகர்களைச் சந்திக்க ஊர் ஊரா போய்ட்டிருந்தே. 'சரி, எல்லாம் முடியட்டும். ஓய்வா இருக்கும்

# பார்த்திபன் கனவு

## –வீர சுதந்திர வெள்ளோட்டம்!

ஒரு மாலைப் பொழுது... வெளியே அடைமழையும் அல்லாத, தூறலும் அல்லாத இடைப்பட்ட மழை. கல்கி அலுவலகத்துக்குள் சடாரென ஓர் ஒளி! மின்னல் போலும் என அலட்சியத்துடன் வேலையில் மூழ்கிய கல்கி, அந்த ஒளி மறையாததைக் கண்டு தலையை உயர்த்தியது. எதிரே அந்த ஒளி மெள்ள மெள்ள உருப்பெற்று புன்னகைத்தது. அந்த ஒளி... அமரர் கல்கி! சட்டென இருக்கையிலிருந்து எழுந்த அவரது குழந்தை கல்கி, இருகரம் கூப்பி வணங்கியது. இனி இருவருக்குள் நடந்த உரையாடல்..

போது பார்ப்போம்'னு காத்திருந்தேன். எப்படி இருந்தது - வாசக சந்திப்பு அனுபவம்?

**கல்கி :** அதைப் பற்றி விரிவாகச் சொல்லணும்னா ஒரு சிறப்பு மலரே வெளியிடணும். அவ்வளவு அனுபவங்கள்! நிறைய பாடங்கள். அதைவிட நிறைய சந்தோஷங்கள்!

**அமரர் கல்கி :** மலர் வெளியிடற அளவுக்கு வேண்டாம்; சுருக்கமாகச் சொல்!

**கல்கி :** விஷுவல் மீடியாவின் பிரமாண்டமான வளர்ச்சி, அது கண்களுக்கு அள்ளித் தரும் கவர்ச்சி, மனத்துக்குத் தரும் கிளர்ச்சியைப் பார்த்து மிரண்டுபோன பத்திரிகையுலகம் போட்டியிட்டு ஜெயிக்க

தானும் மாயக் கிளர்ச்சியில் இறங்கி விட்டதை நீங்கள் அறிவீர்கள்.

**அமரர் கல்கி :** ம்... ம்... எல்லாம் பார்த்துக்கொண்டுதான் இருக்கிறேன்.

**கல்கி :** இந்தச் சூழ்நிலையில் வாசகர் களின் ரசனையும் தரமும் எப்படி இருக் கின்றன என்பதை அறிய இந்தச் சந்திப்புக் கான திட்டத்தைப் போட்டேன். ஆனால் சென்ற இடங்களிலெல்லாம் கிடைத்த உற்சாக வரவேற்பைப் பார்த்ததும் ஆனந்தக் கண்ணீர்! நம்மாலும் தொடர்ந்து ஜெயித்துக் கொண்டிருக்க முடியும் என்ற நம்பிக்கை பிறந்தது. தெம்புடன் கள மிறங்கிவிட்டேன்.

**அமரர் கல்கி :** உன் உற்சாகமான முகத் தைப் பார்த்தாலே தெரிகிறது. சமீப காலமாகவே வடி வமைப்பில் அருமை யான மாற்றங்கள் காண முடிகிறது. கல்கி வயதானவர்கள் மட்டுமே படிக்கும் பத்திரிகை அல்ல. இளம் வயதினரும் ஆவலுடன் படிக் கிறார்கள் என் பதைக் கவனித் தேன். ஆண்டு மலரி லிருந்து என்னவெல்லாம் செய்வ தாக உத்தேசம்?

**கல்கி :** 'இந்தப் பத்திரிகையில் என்ன இல்லை' என்று வாசகர்கள் யோசிக் கும் வகையில் எல்லா விஷயங்களையும் அளிக்கப் போகிறோம். மருத்துவத்துக்கு ஜகஜ்ஜால ஜோடி! புற்றுநோய்க்கு அடுத்த படியாக பெரும் அச்சுறுத்தலாய் இருந்து வரும் சிறுநீரக பாதிப்பைப் பற்றி விழிப்புணர்வு, தடுக் கும் முறையென ஏ டூ இஸட் தகவல்களைத் தரப் போகிறார் டாக்டர் பி.ரவிச்சந்திரன்.

**அமரர் கல்கி :** அப்புறம்?

**கல்கி :** சினிமா என்றாலே ஜொலிக்கும் நட்சத்திரங்கள், பட்டை தீட்டும் இயக்குநர் கள் போன்ற முதல் நிலைக் கலைஞர்கள் மட்டுமில்லை; அவர்களுக்கும் பின்னால் ஒரு கூட்டம் இருக்கிறது. அவர்களின் வாழ்க்கை நிலையைக் கற்பனையின்றி படம் பிடித்துக் காட்ட ஒரு பகுதி... கிளைச் சாலை!

**அமரர் கல்கி :** பிறகு?



**கல்கி :** விறுவிறுப்பான க்ரைம் படத் தொடர். இளைஞர்களை மட்டுமின்றி எல்லோரின் இதயங்களையும் கொள்ளை யடிக்க வாரம் தோறும் காதல் பொன் மொழிக் கதைகள். இப்படி இன்னும் நிறைய புதிய பகுதிகள் மேடையேறப் போகின்றன.

**அமரர் கல்கி :** பலே! அத்துடன் பார்த்திபன் கனவா? மீண்டும் மீண்டும் என் நாவலை வெளியிட வேண்டுமா?

**கல்கி :** இது என் ஒருவனின் முடி வல்ல. ஊர் ஊராகச் சென்று வாசகர்களிடம் நடத்திய கருத்துக் கணிப்பில் நூற்றுக்குத் தொண்ணூறு சதவிகிதம் பேர் கேட்டது அமரர் கல்கியின் நாவல் வேண்டும் என்பதுதான்.

**அமரர் கல்கி :** சரி, என்னவோ புதுமை யாகக் கொடுக்கப் போகிறோமென நான் கைந்து வாரங்களாக சஸ்பென்ஸ் வைத்துக் கொண்டிருக்கிறீர்களே... அப்படி என் னய்யா செய்யப் போகிறீர்கள்?

**கல்கி :** இப்போதுகூட மொத்தமும் சொல்லிவிடாமல் கொஞ்சம் சஸ்பென்ஸ் வைத்து, கொஞ்சம் மட்டும் சொல்கிறேன். பழைமையும் நவீனமும் கைகோத்து 'பார்த் திபன் கனவு' பவனி வரப்போகிறது. ஸ்யாமின் கண்டியிழுக்கும் சித்திரங் கள். அதன் பின்னணியில் காட்சிப் புகைப்படங்கள். உதாரணமாக, தோணித் துறையில் கதை தொடங்கும்போது... தோணித் துறையின் புகைப்படமும் கதை மாந்தர்களின் வரைபடமும் இணைந்து வரும்...

**அமரர் கல்கி :** அட, நன்றாயிருக்கிறதே! அப்புறம்?

**கல்கி :** இயக்குநர், ஒளிப்பதிவாளர், கலை இயக்குநர், ஒப்பனைக் கலைஞர் என சினிமாவின் அனுபவமிக்க, ஆற்றல் மிக்க கலைஞர்கள் பேசப் போகிறார்கள். பார்த்திபன் கனவை வண்ணமான எண் ணத்தால் அலங்கரிக்கப் போகிறார்கள்.

**அமரர் கல்கி :** ஓஹோ, ஏதோ வாச கர்களின் பங்களிப்பு, பரிசு என்றெல்லாம் பார்த்தேனே?

**கல்கி :** ஆமாம்! வாரம் தவறாமல் 'பார்த்திபன் கனவு' நாவலைக் கவனமாகப் படிக்க வேண்டும். ஒவ்வொரு நான்காவது வார முடிவிலும் போட்டி அறிவிக்கப் படும். அறிவுக்கும், எழுத்தாற்றலுக்கும் சவால் விடும் போட்டிகள்... வெற்றி பெறுவோருக்கு அசத்தலான பரிசுகள். இதைத் தவிர வேறு விதமான வாசகர் பங்கேற்புமுண்டு.

**அமரர் கல்கி :** அப்புறம்?

**கல்கி :** மன்னிக்கவும்! முதலிலேயே சொன்னதைப் போல் கொஞ்சம் சஸ் பென்ஸ் இருக்கட்டும். போகப் போக ஒவ்வொன்றாக அறிவிக்கப்படும்.

**அமரர் கல்கி :** ஹா... ஹா... எனக்கே சஸ்பென்ஸா? சரி, வெற்றிக்கு வாழ்த்துகள்! தொடர்ந்து ஆதரித்து வரும் வாசகர்களுக்கு நன்றி! இன்னொரு ஓய்வான சமயத்தில் வருகிறேன்.

*(ஒளி 'விர்'ரென வாசலை நோக்கிச் செல்ல, மீண்டும் இருகரம் கூப்பி வணங் கியது கல்கி)*

**– ஆரணி யுவராஜ்**



ஹைய்யா ஜாலி... அடுத்த இதழ்லேர்ந்து நிறைய நிறைய புதுசு!

**அட்டையில் :** அமரர் கல்கியின் 'பார்த்திபன் கனவு' நாவலுக்கு ஓவியர் ஸ்யாமின் தூரிகைக் காட்சி



# உயிரைக் காப்பாற்றிய உயரம்!

உலகிலேயே உயர (ஏழு அடி 8.95 அங்குலம்) மனிதரான போ சிஷனுக்கு அண்மையில் திருமணமாகிவிட்டது. அதுவும் உள்ளூர்ப் பெண். அவருடைய வயதில் பாதி வயதேயுள்ள ஜியா ஷுஜியானைத் திருமணம் செய்துகொண்டிருக்கிறார்.

சீன மக்கள் ராணுவத்தில் மூன்றாண்டுகள் பணியாற்றி, ராணுவத்தின் கூடைப்பந்து அணியில் ஆடி, தமது உயரத்தால் ஆட்டத்துக்கு விறுவிறுப்பு கூட்டியவர் போ சிஷன். ஆனால், மூட்டு வலி ஏற்பட்டதால் ராணுவத்திலிருந்து பின்னர் விடுவிக்கப்பட்டார்.

போ சிஷனின் நாற்பதாவது வயதில் உள்ளூர் ஓட்டல் ஒன்றில் அவருக்குக் காவலாளி வேலை கொடுத்தார்கள். அவரால் அந்த ஓட்டலுக்கே திடீர் பாப்புலாரிட்டி வந்துவிட்டது.



அந்த ஓட்டலுக்கு வந்த ஒரு கஸ்டமர், போ சிஷனின் உயரத்தை மி.மீ. சுத்தமாக அளந்து பார்த்துவிட்டு, அவர் சார்பாக கின்னஸ் புத்தகத்துக்கு விண்ணப்பித்தார். அவரது உயரத்தைச் சரி பார்த்தபின், கின்னஸ்காரர்கள் இவரை 'உலகின் மிக உயரமான வாழும் மனிதர்' என்று அங்கீகரித்தார்கள்.

கடந்த ஆண்டு டிசம்பர் மாதம் சீனாவே இவரைப் பற்றிப் பேசியது. காரணம், 'ராயல் ஜிடி கடல் உலகம்' என்ற மீன் காட்சி நிலையத்தில் இருந்த இரண்டு டால்ஃபின்கள், இவர் உபயத்தில் உயிர் பிழைத்தன. இரண்டு டால்ஃபின்களும் ஏராளமான பிளாஸ்டிக் குப்பைகளைத் தின்றதன் காரணமாக குடலில் அடைப்பு ஏற்பட்டு பசி இல்லாமல், வயிற்று வலிக்கு ஆளாயின. பிளாஸ்டிக் சமாசாரங்களை வெளியில் எடுக்க முடியவில்லை. திடீரென்று ஒரு மருத்துவர் கொடுத்த ஐடியாவின் பேரில், போ சிஷனை உதவிக்கு அழைத்தார்கள். மருத்துவர்கள் வலுவான துணியால் டால்ஃபின்களின் வாயை அகற்றிப் பிடித்துக்கொள்ள, போ சிஷன் தம்முடைய ஒரு மீட்டருக்கும் நீளமான கையை டால்ஃபினின் வாய் வழியாக வயிற்றுக்குள்ளே விட்டு, பிளாஸ்டிக் குப்பைகளை வெளியில் எடுத்துப் போட்டார். ''இது என் வாழ்க்கையில் மறக்க முடியாத அனுபவம்'' என்கிறார் போ சிஷன்.

**– கௌதம் ராம்**

'ஜிகினா என்பது தொடர்ந்து மின்னாமல், வெளிச்சம் படுவதற்குத் தகுந்தாற் போல மறைந்து மறைந்து மின்னும் தன்மையுடைய தாம்!'

“திருக்கணித பஞ்சாங்கப்படி, உங்களுக்கு ராகு திசை முடிஞ்சு, குரு திசையில குரு புக்தி நடக்குது. கடகத்திலிருந்த சனி, சிம்மத்துக்கு- அதாவது, அஷ்டமத்து சனி விலகி 9th place-க்கு வந்திருக்கு. 14 வருஷ வனவாசம் முடிஞ்சு, அதுலயும் இந்த 2½ வருஷமா, அடாத துன்பத்தையெல்லாம் அனுபவிச்ச நீங்க, பொறக்கும்போது குரு 11-ஆம் இடத்தில லாபஸ்தானத்தில இருந்ததாலே இந்த குருதிசை உங்களுக்கு அமோகம் மட்டுமே கொடுக்கும். அதாவது, வெறுங்கால்ல நடந்துபோன நீங்க, 89-ல கார்ல போனீங்க. இப்ப சைக்கிள்ல போய்க்கிட்டிருக்கீங்க. இனிமே ஏரோப்ளேன்தான்! பேஷா இருப்பீங்க!'' சொல்லிக்கொண்டேயிருந்தார் ஜோதிடர்.

எனக்குக் கணிப்பவர்களைவிட, ஜோதிடம் ஒரு கணிதம் என்ற வகையில் நம்பிக்கையுண்டு. சூர்ய - சந்திரனை சட்டை செய்யாத உழைப்பு மட்டுமே என் தாரக மந்திரம். ஆனால், ஒரே மாதிரியான உழைப்புக்கு உயர்வு - தாழ்வுகள் ஏற்படும்போது மட்டும் கொஞ்சமாய்க் குழப்பம். அனேக ஜோதிடர்கள் நடந்ததைத் துல்லியமாகச் சொல்லி விடுகிறார்கள்.

# எல்லாப் புகழும் அவருக்கே!

## ரா. பார்த்திபன்

இந்த சினிமாவில் என் உழைப்பையும், விடா முயற்சியையும் ஆழமாய் விதைத்திருக்கிறேன். எனவே, இந்த குருதிசையில நீங்க வெற்றி பெறுவீங்கன்னு சொல்லும் போது, ''நிச்சயமா! பின்னே?'' என்று என் உள்மனம் சொல்கிறது.

எனக்கு இனிதான் குருதிசை என்பது ஜாதகம். நான் இவ்வளவு தூரம் வந்ததற்கே, என் குருதான் காரணம். எனக்கு குருதிசை என்றால் அது, 'வள்ளுவர்.கோட்டம், 5-ஆவது குறுக்குத்தெரு' இருக்கும் திசைதான். அந்தத் திசைதான் எனக்குக் கிழக்கு! என்று திரு.K.பாக்யராஜ் அவர்களை, என்று என் குருவாக ஏற்றுக் கொண்டேனோ, அன்றிலிருந்துதான் என் 'புண்'நகை புன்னகையாக மாறியது. என் நம்பிக்கை நீச்சம் அடைந்திருந்த நிலையில் தான் வெற்றியின் உச்சத்திலிருந்த அவரிடம் சிஷ்யனாக இணைந்தேன். அதுவரை எனது ஒவ்வொரு நாளும், கிழிக்கப்பட்டு கீழே எறியப்படுவதை நானே கண்டேன். அவரிடம் பணிபுரிந்தபோது, என் ஒவ்வொரு நாளும் மலர்வதையும் அதில் நான் வளர்வதையும் நானே, அணுஅணுவாய் பலித்தேன். பத்தோடு பதினொன்றாய் (ஏற்கெனவே பத்து உதவியாளர்கள் இருந்ததால்) பணிபுரியத் துவங்கிய நான், சிந்தனையில் மட்டும் அப்படி இல்லாததால், கவனிக்கும்படியாகவும், தனியாகவும் தெரிந்தேன். முன்னாள் உதவியாளர்களுக்கு முன் அனுபவமும், பின்புலமாய் ஏகப்பட்ட படிப்பும் இருந்தன. எனக்கு எதுவுமின்மையால் ''இந்த மாதிரி ஒரு சீன் சொல்லுங்க

பார்க்கலாம்'' என்று டைரக்டர் கேட்கும் போது, எல்லோருக்கும் 'முனுக்' என்று, சீன் வந்துவிடும். எனக்கு மட்டும் முட்டி மோதிக் கொண்டாலும் வராது. அவருடைய office-ன் ஈசானிய மூலையிலிருந்து ஒவ்வொரு மூலை யிலும் நின்று, என் மூளையைக் கசக்கிப் பிழிந்து, ஒரு சீன் எடுத்து, கொண்டு போய் டைரக்டரிடம் சொல்லுவேன். ''இன்னொரு தடவை சொல்லு பார்க்கலாம்'' என்பார். சொல்ல, வெத்தலையின் நரம்புகளை நீவி விட்டுக் கொண்டிருந்த அவரது விரல், நின்று நிறுத்தி, என்னைப் பார்க்கும். ''பரவால்ல, சுயமா சிந்திக்குற'' (எனக்கு அப்பவே குரு புத்தியில, சுய புத்தியும் வேலை செஞ் சிருக்கு போலயிருக்கு!)
அப்பல்லாம் தவறாம தினமும் ஏதாவது ஒரு விஷயம் அவர்கிட்ட கத்துக்குவேன். தப்பித் தவறி நான் ஏதாவது ஒரு நல்ல சீன் சொல்லி, அதுக்கு அவர் கண்ணாலேயே 'சபாஷ்'னு சொன்னாப் போதும். ஆஸ்காரைவிட அது உசத்தி! மத்தவங்களுக்கு எப் படியோ... எனக்கு அவரோட வாழ்ந்த வாழ்க்கை குருகுலம்.

நான் அவருக்கு வாழ்க் கைப்பட்ட முதல் படம் 'தாவணிக் கனவுகள்'. நாலு தாவணி + ஒரு பாவாடைச் சட்டை (10 வயசு) = 85லிருந்து 90 வயசு இருக்கும். நாலு பேரும் பார்க்கும்படியான உரு வம். எனக்கோ பார்க்கும் படி யான வயசு. Shooting முடியற



# ஜிகினா

வரைக்கும் கண்ணைக் கடிச்சுக்கிட்டு இருந்தேன். (பல்லைக் கடிக்கிறதுக்குப் பதிலா) காரணம். என் கனவு, தாவணியைப் புடவையாக்கி, புடவையைப் புள்ளத்தாச்சியாக்கி குடும்பஸ்தனா ஆகுறது இல்ல. கிடைத்தற்கரிய வாய்ப்பு! உருப்படியா பயன்படுத்தி, படிப்படியா முன்னேறி தேசிய விருதெல்லாம் வாங்கணும். என்னோட 'dedication'-க்குப் பலன் ஆரோகணமாக இருந்தது.

படம் முடிஞ்சதும் 'Title' -ல பெயர் போடுறதுக்கு உதவியாளர்கள், 'list-ல கடைசியா பார்த்திபன் பெயர் இருந்ததைப் பார்த்துட்டு ''இது யாருய்யா இது?''ன்னு, கேட்டார். ''என் பேருதான் சார்''-ன்னு சொன்னேன். அது வரைக்கும் என்னை, மூர்த்தின்னுதான் தெரியும் அவருக்கு.

''16 வயதினிலே படத்துல, நான்கூட 'Title card' எழுதிக் கொடுக்கும்போது, ராஜேன்ற என் பெயரை பாக்யராஜ்னு எழுதிக் கொடுத்தப்ப, எங்க டைரக்டர் இதே மாதிரி கேட்டது எனக்கு ஞாபகத்துக்கு வருது. நீயும் என்னை மாதிரி நல்லா வருவே!'' என்றதும், சங்கு ஊதுற சத்தமே கேட்டுடுச்சு எனக்கு. அந்த சந்தோஷத்துல! எப்ப உயிர் வந்ததுன்னு எனக்கே தெரியாது. இரண்டாவது படம், 'சின்னவீடு'! அந்தப் படத்துக்கு 'Title' எழுதிக் கொடுக்கும் போதும், 'Assistant Directors list'-ல என் பெயரை எழுதிக் கொடுத்தேன். அதைப் பார்த்துவிட்டு ஒரு சிரிப்பு சிரிச்சுட்டு 'Associate Directors' அட்டையை எடுத்து, அதுல என் பெயரை அவரே எழுதினாரு. மறுபடியும் சங்கு!

வேறொரு வெள்ளை பேப்பரை எடுத்து 'வசன ஒத்துழைப்பு - R. பார்த்திபன்'னு அவர் எழுத, தாரை தப்பட்டையெல்லாம் கேக்க ஆரம்பிச்சுடுச்சு!

சந்தோஷத்துல சர்வமும் அடங்கி, நான் சவமானதை, இப்ப என்னால இதுக்கு மேல விளக்க முடியாது. ஏன்னா... திரைக்கதையிலும், வசனத்திலயும் அவரு 'கிங்கு'! அவர் கையால அப்படி எழுதுனதால என்னைக் காவது நான் சினிமாவுல ஜெயிப்பேங்கிற நம்பிக்கை ஊர்ஜிதமாயிடுச்சு. சமீபத்துல 'தீபாவளி'ங்கிற படத்தோட Audio Release- ல பாக்யராஜ் சார் பேசும்போது, ''ஷங்கர் இப்போது தன்னோட உதவியாளர்களுக்கு வாய்ப்பு கொடுக்கிற மாதிரி, ஒரு நல்ல காரியத்தை நானும் எப்பவோ ஆரம்பிச்சேன். ஆனா, அது நடக்கல!'' அப்படின்னு, மேடையில இருக்குற என்னைப் பார்த்துக்கிட்டே சொன்னார். நான் குற்ற உணர்ச்சியில கூனிக் குறுகிப் போயிட்டேன். 'முதல் பார்வை' நான் இயக்குவதாக இருந்த முதல் படம். எங்க டைரக்டரோட சொந்தப்படம். அதுக்கு முன்னாடி எந்த டைரக்டரும் செய்யாதத, தானே முன்னுதாரணமா இருந்து, எங்க டைரக்டர் எனக்குக் கொடுத்த ஒரு வாய்ப்பு! ஆனா, அந்த வாய்ப்பை நான் மிகச் சரியா பயன்படுத்தி எங்க டைரக்டரோட பெயரை காப்பாத்துற அளவுக்கு, செய்ய முடியாத ஒரு



சூழ்நிலை, அவரைச் சுத்தியிருக்கிற சில பேரால எனக்கு ஏற்பட்டுச்சு. அதை அவர் கிட்டயும் சொல்ல முடியாத ஒரு இக்கட்டான நிலை.

அந்தப் படத்தோட நாயகன் கொஞ்சம் நவரசம் நிறைந்தவர். தொடர்ந்து 27 நாட்கள் கால்ஷீட் கொடுத்திருந்த அவர், கழுதை தேய்ஞ்சு கட்டெறும்பு ஆன கதையா, கடைசியா 27-ஆம் தேதியிலிருந்து மூன்று நாள் மட்டும் தேதிகளை ஒதுக்கிக் கொடுத்தார். ஒரு 15-ஆம் தேதி வாக்கில, வேறொரு தயாரிப்பாளரும் அந்த நாயகன் அதே 27,28,29 தேதிகளைத் தனக்கு எழுதி, மடிச்சு, கொடுத்திருந்ததை விரிச்சுக் காட்டினார். நிபத, தபறி - இப்படி, எழுத்து முன்னப் பின்ன ஆகுற அளவுக்குப் பதறிப் போய் அவர்கிட்ட போய் நின்னேன். அவர் ரொம்ப கூலா ''நோ ப்ராப்ளம்... பாஸ்!'' உங்களுக்கு 'Halfday', அவருக்கு 'Halfday' வந்துட்டுப் போறேனே!'' என்றார்.

அவர் பொதுவா, முழுநாள் கால்ஷீட் கொடுத்தாலே... மதியம்தான் வருவாரு. விளக்கு வச்சதுக்கு அப்புறம் 'Shooting spot'ல் இருக்கவே மாட்டாரு. அப்படிப் பட்டவரு பாதி நாள் கால்ஷீட் கொடுத்தாருன்னா எந்த வருஷத்துல அந்தப் படம் முடியறது?! இப்படி ஏகப்பட்ட மூச்சுத் திணறல்களோட ஒரு கடிதம் எழுதி, எங்க டைரக்டர்கிட்ட கொடுத்துட்டு, நான் காள ஹஸ்தியில போய் ஒளிஞ்சுக்கிட்டேன். இப்ப நினைச்சுப் பார்த்தாலும் நான் செஞ்சது சரின்னுதான் எனக்குப் படுது. கொடுத்த வாய்ப்பைப் பயன்படுத்திக்கலேன்ற குற்றத்தைவிட, அவரோட பணத்தையும் செலவழிச்சு, படத்தையும் எடுத்து, அவரு என் மேல வெச்ச நம்பிக்கையை சாகடிக்காம இருந்ததே மேல்! பாக்யராஜ் சார், திரைப் படங்கள்லதான் innocent -ஆ நடிப்பாரே தவிர, நிஜத்தில் அவரு ரொம்ப ஸ்ட்ராங்க்!

**"பாக்கியராஜ் சார், திரைப்படங்கள்லதான் innocent-ஆ நடிப்பாரே தவிர, நிஜத்தில் அவரு ரொம்ப ஸ்ட்ராங்க்!"**

'ஆக்ரி ராஸ்தா'-ன்னு ஒரு ஹிந்திப் படம். ஒரு பாதாளச் சாக்கடை மாதிரி 'செட்' போட்டு, அவரு டைரக்ட் பண்ணிக் கிட்டிருக்கப்போ...திடீர்னு மின்சாரம் எப்படியோ கசிஞ்சு, கிட்டத்தட்ட 120 பேர் இருக்குற அந்த 'செட்' முழுக்க (காலடியில வேற தண்ணி ஓட்றதால), கன்னா பின்னான்னு ஷாக்கடிக்க, குய்யோ முய்யோன்னு கத்திக்கிட்டு எல்லோருமே செட்டுக்கு வெளியே ஓடி வந்துட்டோம். ஒரு வழியாக மின்சாரம் துண்டிக்கப்பட்டது. 'தப்பிச்சோம் எல்லாரும்னு' சந்தோஷப் பட்டப்ப ஒரே ஒருத்தரை மட்டும் காணோம்... பாக்யராஜ் சார். 'ஐயையோ'ன்னு கத்திக்கிட்டு நான் உள்ளே ஓட, எல்லோரும் பின்தொடர...இப்பதான் real shock! ஸ்டைலா உக்காந்துக்கிட்டு தம் அடிச்சிக் கிட்டிருந்தாரு டைரக்டர்.

''உங்களுக்கு ஒண்ணும் ஆகலையே சார்.'' ஒரு உதவியாளர் கேட்க, குனிந்து அவர் அமர்ந்திருந்த மர ஸ்டூலைப் பார்த்துவிட்டு அவரது 'Trademark' சிரிப்பைத் துப்பினார். அப்போதுதான் எங்கள் மரமண்டையில் உரைத்தது. சமயோசிதம் + strong mind அவருக்குண்டு!

A.R.ரஹ்மான், அடிக்கடி சொல்வார், 'எல்லாப் புகழும் அல்லாவுக்கே' என்று. அப்படி, என் அல்லா புகழும் திரு. K.பாக்யராஜ் சாருக்கே சொந்தம்!

'ஜிகினா' தொடருக்காக, கல்கி அலுவலகத்திலிருந்து வரும் காசோலையை நான் மதிப்பேன்; ஆனால் எதிர்பார்க்க மாட்டேன். ஆனால், நான் எதிர்பார்த்து மதிக்கும் ஒரு விஷயம், வாசகர் கடிதம். So வாசகர்களே...! என் அடுத்த பட வேலைகளின் பளு காரணமாக...

***மின்னி மறையும் ஜிகினா,***
***இப்போதைக்கு மறைந்து***
***மீண்டும் மின்னும்.***

"பள்ளிக்கூடத்தில் எனக்கு மூத்த மாணவர் ஒருவர் ஓவியக் கல்லூரியில் சேர ஆர்வமாக இருந்தார். அவரைப் பார்த்துத்தான் எனக்கு ஓவியக் கல்லூரியில் சேர்ந்து படிக்க வேண்டும் என்று ஆசை ஏற்பட்டது. ஆனால், அவரால் ஓவியக் கல்லூரி நுழைவுத் தேர்வில் தேற முடியவில்லை. ஆனால், எனக்கு அந்த நல்ல வாய்ப்புக் கிடைத்தது. என் அப்பாவுக்குக் கதை எழுதுவதில் ஆர்வம் உண்டு. என் அண்ணன் கவிதைகள் எழுதுவார். அவர்கள் இருவரும் எனக்கு ஓவியம் வரைவதில் உள்ள ஆர்வத்தைப் பார்த்துவிட்டு, 'உனக்கு விருப்பமானால், தாராளமாக ஓவியக் கல்லூரியில் சேர்ந்து படி' என்று பச்சைக் கொடி காட்டினார்கள். நான் கும்பகோணம் ஓவியக் கலைக் கல்லூரியில் சேரவும், இன்று ஓவியராக வலம் வருவதற்கும் அவர்கள்தான் முக்கியமான காரணம்'' என்கிறார் ஓவியர் கிருபானந்தம்.



* திருநாவுக்கரசு



# நான்கு

கிருபானந்தத்தின் சக மாணவர் திருநாவுக்கரசு. இவர்களின் நண்பர் கமலேஷ்குமார் ஒரு சிற்பி. இவருக்கும் தஞ்சை மண்தான். இந்த மூவரும் சென்னை ஓவியக் கலைக் கல்லூரியில் படித்தவரும் மூத்த சிற்பியுமான ஸ்ரீனிவாசனுடன் இணைந்து பெங்களூரில் நடத்திய ஓவிய, சிற்பக் கண்காட்சிக்குக் கலை ஆர்வலர்கள் மத்தியில் நல்ல வரவேற்பு! ஆகவே, அண்மையில் சென்னை லலித் கலா அகாடமியின் கலைக் கூடத்தில் தங்களது ஓவிய மற்றும் சிற்பக் கண்காட்சியை நடத்தினர். அடுத்து டெல்லியிலும், ஹைதராபாதிலும் கண்காட்சிகள் நடத்துவது இவர்களின் திட்டம்.

* கமலேஷ்குமார்





''நான் கிராமத்து ஆசாமி என்பதால் கிராமத்து மக்களும், கிராமத்துக் காட்சிகளும் என் மனதில் ஆழமாகப் பதிந்துவிட்டன. அதுவும், என் இளம் வயதில் கிராமங்களில் நான் பார்த்த சேவல் சண்டைகள் இன்றைக்கும் என் மனத்தை விட்டு அகல மறுக்கின்றன. அதனால், என் முதல் கண்காட்சியில் முழுக்கக் கோழிச் சண்டைக் காட்சிகளையே கோட்டு ஓவியங்களாக வரைந்திருந்தேன். கோழிகளை அடுத்து என்னைக் கவர்ந்தவை காளைகள். இன்று நான் ஒரு நகர்ப்புற வாசி. ஆனாலும், ஓவியங்கள் என்று வந்துவிட்டால், என்னால் கிராமங்களை விட்டு வெளியில் அடி எடுத்து வைக்க முடியவில்லை'' என்கிறார் கிருபானந்தம்.

திருநாவுக்கரசுக்கு நவீன பாணி ஓவியங்கள் வரைவதில்தான் ஆர்வம். இவரது சாய்ஸ் பெண்கள். ''ஆதிகாலம் தொட்டு இந்தச் சமூகத்தில் பெண்களுக்கு முக்கியத்துவம் தரப்பட்டு வருகிறது. அதேசமயம் பெண்களின் பங்களிப்பு காலத்துக்கேற்ப மாறி வருகிறது. அவர்களின் முன்னேற்றம் எனக்குப் பிரமிப்பூட்டுகிறது. பெண்களைத் தவிர்த்துவிட்டு இந்த உலகம் இயங்குவது சாத்தியமில்லை என்பது என் கருத்து'' என்கிறார்.

இந்த நான்கு கலைக் காதலர்களில் மூத்தவர் என்று ஸ்ரீனிவாசனைக் குறிப்பிடலாம். இவர் சென்னை ஓவியக் கலைக் கல்லூரியில் படித்தவர். சிறு வயதில் கண்ட திருக்கோவிலூர், திருவண்ணாமலை கோயில் சிற்பங்கள்


* ஸ்ரீனிவாசன்



# காதலர்கள்!

ஏற்படுத்திய தாக்கம்தான், பின்னாளில் இவர் ஒரு சிற்பியாவதற்கு அஸ்திவாரமாக அமைந்திருக்கின்றன. இவர் சிற்பங்களாக வடிக்கத் தேர்ந்தெடுப்பது மனித முகங்கள்தான். ''இந்த உலகில் கோடானுகோடி மக்கள் வசிக்கிறார்கள். அவர்கள் முகங்கள் ஒவ்வொன்றும் ஒரு விதமாக இருக்கின்றன. நான் மனித முகங்களின் தனித்துவம் காரணமாக அவற்றை 'ராஜமுகங்கள்' என்று பெருமையுடன் குறிப்பிடுகிறேன்'' என்கிறார் ஸ்ரீனிவாசன்.

சிற்பி கமலேஷ்குமார் கிராமத்துக் கலைஞன். இவர் வடிக்கும் சிற்பங்கள் எல்லாம் கிராமத்து மக்களும், கிராமிய மணம் வீசும் விஷயங்களும்தான். ''கிராம மக்கள் உணர்ச்சிபூர்வமானவர்கள். அவர்கள் சாதாரணமாகப் பேசினால்கூட பலவிதமான முக பாவங்களைக் காணலாம். எனது சிற்பங்களில் அந்த மக்களின் முக பாவங்களைக் கொண்டு வருவதில் நான் கணிசமான அளவு வெற்றி பெற்றிருக்கிறேன் என நம்புகிறேன்'' என்கிறார் பல முறை பிரான்ஸ் நாட்டுக்குச் சென்று சிற்பச் செயல்முறை விளக்கம் அளித்திருக்கும் கமலேஷ்.

– மௌலி


* கிருபானந்தம்



சிரி சிந்தி செயல்படு!

# சத்துக்கு கியாரண்டி!

கருத்து: யுவா படம்: பிள்ளை









Registered with the Registrar of Newspaper of India under No.1041/57 *Registered No. TN/CC(S)DN/144/06-08-Licensed to post without prepayment under PMG's Licence No.WPP TN/CC(S)DN/70/06-08-Registered as a Newspaper in Srilanka.